
''சரும அழகைப்பெற நான்
லக்ஸ் டாய்லட் சோப்பையே
நம்பியிருக்கிறேன்''
என்று சொல்கிறார்
மாதுரி தேவி
LUX
LUX TOILET SOAP
இனிய மணத்துடன் கூடிய
இந்த வெண்மையானதும் சுத்த
மானதுமான சோப் உங்கள் சருமத்தை
வசீகரமாகச்செய்யும்!
சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்
LTS. 326-X30 TM


ஜுபிடர்
சங்கீதா
தயாரிப்பு
ஆகஸ்ட் 30உ
முதல்
ஜமீன்தார்
டைரக்ஷன்: P.V.கிருஷ்ணன்.. ஸ்டுடியோ: சென்டரல்
சென்னை
கெயிட்டி.. பாரத் & சயானி
மற்றும் தென்னாடெங்கும் ஆரம்பம்

இப்பொழுது வெற்றிகரமாக நடைபெறுகிறது!



# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 5

1952 ஆகஸ்டு 31

நந்தன ௵
ஆவணி 16



**"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.**

<u>அட்டைப் படம்</u>

முகம் பார்க்கும் கண்ணாடியைப் போல் முகஸ்துதி வேறு எவராலும் செய்ய முடியாது என்று பொருள்பட ரவீந்திரநாத் தாகூர் எங்கேயோ ஓர் இடத்தில் கூறியிருக்கிறார்.

அதற்கொப்ப இந்த இதழ் அட்டையில் தோன்றும் மங்கையையும் அந்த முகம் பார்க்கும் கண்ணாடி மிகவும் புகழ்ந்தது.

ஆம், அவள் கண்ணாடி முன் அமர்ந்து தலைக்கு வாசனைத் தைலம் தடவி, கூந்தலை வாரிப் பின்னி முடித்தாள்!

கண்ணாடி, "கடல் அலைபோல் சுருண்டு சுருண்டு தவழும் உன் கருங் கூந்தலின் அழகே அழகு!" என்று கூறியது!

அவள் தன் நீண்டு அகன்ற கண்களுக்குக் கரிய மை இட்டுக் கொண்டாள்!

"உன் அஞ்சனம் தீட்டிய விழிகளின் கூரிய பார்வையைத் தாங்க மாட்டாது உன்னைத் தஞ்சமடையாத பேர்களுமுண்டோ!" என்றது அந்த முகம் பார்க்கும் கண்ணாடி.

நெற்றியில் திலகமிட்டுக் கொண்டாள்!

"நீல வானத்தில் பூரண சந்திரன் உதித்தது போல் உன் முகம் ஜொலிக்கிறது" என்றது கண்ணாடி!

இவ்வளவு புகழுரையும் கேட்ட அவள் மகிழ்ச்சியடையவில்லை. அவளைப் பிரிந்து சென்ற காதலனையே நினைத்து வாடலானாள்! 'என்னுடைய இவ்வளவு வனப்பையும் பார்த்து மகிழ்ச்சி பாராட்ட வேண்டியவர் அவரல்லவோ?' என்று எண்ணி ஏங்கினாள்.

என்னையவர் அறமறந்தும்
யானவரை மிகநினைந்திங்(கு)
இருந்துவா டல்
முன்னைவிதிப் படிதானோ?
முற்பிறப்பில் செய்தவினை
முடிந்தவா றோ!

இப்படி ஏங்கும் அவளுக்கு நம்மால் சொல்லக் கூடிய ஆறுதல் மொழிகள் என்ன இருக்க முடியும்? "எதுவும் நிலையாத இந்த மனித வாழ்க்கையில், உன் சோகம் மட்டுமா நிலைத்திருக்கப் போகிறது? அது கட்டாயம் மாறி நீ என்றும் அடையாத இன்பம் அனுபவிக்கப் போகிறாய்! உன் காதலன் நிச்சயம் திரும்பி வருவான்!" என்பதுதான் அல்லவா?

## இரு பக்கமும் நல்லச் சகுனம்




மேற்கே: குடகு நாட்டில் நல்ல மழை பெய்திருக்கிறது. அத்துடன் ராஜாஜி சர்க்காரின் அவசரச் சட்டமும் உதயமாகியிருக்கிறது. இரண்டினாலும் தஞ்சை ஜில்லா விவசாயிகள் நன்மை அடைவார்கள்.

## நவீன மேனகை!




வருங்காலத்தில் அகில இந்திய ரேடியோ ஒலிபரப்பு நிகழ்ச்சிகளில் மட்டரக சினிமா சங்கீதத்தைக் குறைக்கப் போவதாக விளம்பர மந்திரி கேஸ்கர் ரேடியோவில் பேசுகையில் கூறினார்.

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 5

# அறுபது ஆண்டு அறப்போர்!

மூப்பத்தெட்டு வருஷங்களுக்கு முன் மூண்ட முதலாவது உலக மகா யுத்தத்துக்கு நாலு வருஷ காலத்தில் ஒரு முடிவு ஏற்பட்டது.

பல்லாண்டுகள் தொடர்ந்து நடக்கலாம் என்று இராணுவ நிபுணர்களால் கூறப்பட்ட இரண்டாவது உலக மகா யுத்தம், ஆறு ஆண்டுகளில் ஒரு முடிவைக் கண்டது.

பாரத நாட்டிலே மகாத்மா காந்தியின் தலைமையில் அரை நூற்றாண்டு வரையில் நடைபெற்ற சாத்வீகமான சுதந்திரப் போரும், பிரிட்டிஷாருக்குக் கௌரவத்தைக் கொடுக்கக் கூடிய முறையில் சுமுகமாக முடிவுற்றது.

ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் காந்தி மகானின் தலைமையில் தென்னாப்பிரிக்காவிலே ஆரம்பமான போர் இன்னும் முடிவடையவில்லை. சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் தொடங்கப்பட்ட அந்த அறப்போர் இன்று உச்ச நிலையை அடைந்திருக்கிறது; பயங்கரமான கட்டத்துக்கு வந்திருக்கிறது.

அந்தப் போர் எதில் வந்து முடியுமோ என்று பிரிட்டனும் அமெரிக்காவும் மற்ற ஐரோப்பிய நாடுகளும் கலங்குகின்றன.

அதிசயமாக இதுவரையில் மௌனம் சாதித்து வந்த பிரிட்டிஷ் பத்திரிகைகள் பதறுகின்றன; ஆப்பிரிக்காவில் எழுந்துள்ள வெள்ளையர்—கறுப்பர் தகராறு, உலகம் முழுவதும் உள்ள வெள்ளையர்களும் கறுப்பர்களும் மோதிக் கொள்ளும்படியான பயங்கர நிலைமையை உண்டாக்கி விடக்கூடும் என்று கூறுகின்றன.

எக்காலத்திலும் வெள்ளையர்கள் சார்பில் பேசும் லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை கூட நிற வெறியர்களுக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறது.

"உலக மக்களில் பெரும்பாலோர் கறுப்பு நிறத்தினர்தான். எனவே அவர்களுடன் சுமுகமான உறவை ஏற்படுத்திக் கொண்டாலன்றி, உலகிலுள்ள வெள்ளையர்கள் வாழ முடியாது. இந்த அடிப்படையான உண்மையை அறிந்து கொள்ளாமல் தென்னாப்பிரிக்கா சர்க்கார் கண்மூடித்தனமாக இருக்கிறார்கள். இது வரப்போகும் பேராபத்துக்கு அறிகுறியாகும்" என்று "டைம்ஸ்" பத்திரிகை அங்கலாய்த்திருக்கிறது.

தற்போது தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் மாத்திரமல்ல, தென்னாப்பிரிக்கச் சுதேசிகளும் நிற வெறிச் சட்டங்களை எதிர்த்துச் சாத்வீகப் போர் நடத்துகிறார்கள்.

அதை யொட்டித் தென்னாப்பிரிக்கா சர்க்கார் இந்திய, சுதேசித் தலைவர்கள் உள்பட ஆயிரக்கணக்கானவர்களைச் சிறைப்படுத்தி யிருக்கிறார்கள்.

அக்கிரமமான சட்டங்களை மீறிச் சத்தியாக்கிரகம் செய்யும் சிறுவர்களுக்குச் சவுக்கடி தண்டனை விதித்து வருகிறார்கள்.

எனவே, இதுவரையில் தென்னாப்பிரிக்கா வாழ் இந்தியர்களை மாத்திரம் பொறுத்திருந்த விஷயம், இப்போது அகில உலக முக்கியத்துவம் பெற்றிருக்கிறது.

தென்னாப்பிரிக்கா சர்க்கார் கையாண்டு வரும் விபரீத நடவடிக்கைகளின் விளைவாக உலக அமைதிக்கே ஆபத்து ஏற்படக் கூடுமாதலால், அந்தப் பிரச்னையை ஐக்கிய நாடுகள் சபையில் எழுப்ப இந்திய சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். மேற்படி சபையில் இந்தியப் பிரதிநிதியை ஆதரித்து நிற்க இந்தோனேஷ்யா முதலிய பல நாடுகளும் உறுதி கொண்டிருக்கின்றன.

தென்னாப்பிரிக்காவில் நடைபெறும் சத்தியாக்கிரகத்தைப் பாராட்டியும், அத்தேச சர்க்காரின் அடக்கு முறைகளை வன்மையாகக் கண்டித்தும் சென்னைமா நகரம் உள்பட பாரத நாட்டில் உள்ள பல இடங்களிலும் சென்ற வாரம் மாபெரும் பொதுக் கூட்டங்கள் நடந்திருக்கின்றன.

* * * *

இவ்வாறாக, உலகம் முழுதும் கண்டனசண்டமாருதத்தை எழுப்பியுள்ள விசித்திர மனிதர் யார் என்பது உலகம் அறிந்ததே. அவர்தான் தென்னாப்பிரிக்காவில் தற்போது பிரதம மந்திரியாக இருக்கும் டாக்டர் மலான்.

தென்னாப்பிரிக்காவில் அனுஷ்டிக்கப்படும் நிற வெறிக் கொடுமையை முதன் முதலாக உலகம் அறிய அம்பலப்படுத்தியவர் மகாத்மா காந்திதான் என்பதை அறியாதார் இல்லை.

எனினும் டாக்டர் மலானின் பதவி காலத்தில் தான் மேற்படி கொடுமை சகிக்க முடியாத எல்லையை அடைந்திருக்கிறது; வல்லரசுகளின் கவனத்தை இழுத்திருக்கிறது; உலக மக்களின் கண்டனத்தை எழுப்பி யிருக்கிறது.

டாக்டர் மலான் பிரதம மந்திரி பதவி ஏற்றபின் நிறவெறியை அடிப்படையாகக் கொண்டு பல பல புதிய சட்டங்களை இயற்றினார். இன்றையக் கொந்தளிப்பான நிலைமைக்கு அந்த அக்கிரமமான சட்டங்களே காரணம்.

சில மாதங்களுக்கு முன் டாக்டர் மலான் இயற்றிய ஒரு சட்டம் ஏற்கெனவே ஐம்பதினாயிரம் சுதேசிகளுக்கு இருந்த வாக்குரிமையைத் திடீரென்று பறிமுதல் செய்து விட்டது.

தென்னாப்பிரிக்கா அரசியல் திட்டத்தின்படி அத்தகைய சட்டம் நிறைவேற வேண்டுமாயின் அதற்கு ஆதரவாகப் பார்லிமெண்டில் உள்ள அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு மடங்குப் பேர் வாக்குக் கொடுக்க வேண்டும்.

தென்னாப்பிரிக்கா பார்லிமெண்டில் டாக்டர் மலான் கட்சியில் 86 அங்கத்தினர்களும் எதிர்க் கட்சியில் 78 அங்கத்தினர்களும் இருக்கிறார்கள்.

டாக்டர் மலான் தன் கட்சிக்கு உள்ள மேற்படி அற்ப மெஜாரிட்டியைக் கொண்டு வாக்குரிமைப் பறிமுதல் சட்டத்தை அவசரக்கோலமாக நிறைவேற்றி விட்டார்.

அவ்விஷயமாக நடந்த வழக்கில் அந்தச் சட்டம் செல்லத் தக்கதல்ல என்று தென்னாப்பிரிக்கா சுப்ரீம் கோர்ட்டார் தீர்ப்புக் கூறி விட்டனர்.

நிறவெறி தலைக்கேறியுள்ள மலான் மேற்படி தீர்ப்பை ஒத்துக் கொள்ள வில்லை.

உலகத்தில் எந்த தேச சர்க்காரும் அந்தத் தேசத்தில் உள்ள உயர்தர நீதி மன்றத்தின் தீர்ப்புக்குப் பணிவதுதான் வழக்கமாக இருக்கிறது.

ஆனால், மலான் சர்க்கார் மாத்திரம் தாங்கள் அத்தகைய விதிக்கு விலக்கானவர்கள் என்பதைக் காட்டி விட்டார்கள்!

தென்னாப்பிரிக்கா இந்தியர் விஷயமாகச் சில வருஷங்களுக்கு முன் ஐக்கிய நாடுகள் சபை செய்த தீர்மானத்தின்படி மலான் சர்க்கார் நடந்து கொள்ளவில்லை. தென்மேற்கு ஆப்பிரிக்கா சம்பந்தமாக சர்வ தேசக் கோர்ட்டாரின் தீர்ப்பையும் ஏற்றுக் கொள்ளவில்லை.

எனவே, அதே வழியைப் பின்பற்றி இப்போது மலான் சர்க்கார் தென்னாப்பிரிக்கா சுப்ரீம் கோர்ட் தீர்ப்பையும் அலட்சியம் செய்ததைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

டாக்டர் மலான் அந்தத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாதது மாத்திரமல்ல, இன்னும் ஒரு படி மேலே சென்று விட்டார்.

அதாவது அரசியல் சம்பந்தமான சட்டங்களை பொட்டித் தீர்ப்புக் கூற சுப்ரீம் கோர்ட்டுக்கு அதிகாரம் இல்லை, அத்தகைய சந்தர்ப்பங்களில் தென்னாப்பிரிக்கா பார்லிமெண்டே ஹைகோர்ட்டாக விளங்கி முடிவு செய்யும்; அந்த முடிவில் தலையிட எந்தக் கோர்ட்டுக்கும் எவ்வித உரிமையும் இல்லை என்று சட்டம் நிறைவேற்றவும் முற்பட்டு விட்டார்!

டாக்டர் மலான் ஹிட்லரின் சீடர் என்பதைப் பலரும் மறந்திருக்கலாம்.

எழுபத்தெட்டு வயதுள்ள டாக்டர் மலான் முதலாவது மகா யுத்தத்தின்போது கெய்சரைப் பலமாக ஆதரித்தார். இரண்டாவது மகா யுத்தத்தின் போது ஹிட்லரையும் நாஜியர்களையும் பகிரங்கமாகப் பாராட்டி வந்தார்.

டாக்டர் மலானை, குருவை மிஞ்சிய சீடர் என்றும் கூறலாம். ஹிட்லர் தமது நாட்டில் சிறுபான்மையோராக இருந்த யூதர்களை அடியோடு ஒழிக்க முற்பட்டார். ஆனால் மலானோ தென்னாப்பிரிக்காவில் பெரும்பான்மையோராக உள்ள கறுப்பு நிறத்தினரை அரசியல், சமூதாய வாழ்விலிருந்து ஒழித்துக் கட்ட முனைந்திருக்கிறார்.

தென்னாப்பிரிக்காவில் பிரிட்டிஷாரின் தொகை பத்து லட்சம் ஆகும். ஆனால் சுதேசிகளோ ஒரு கோடி பேருக்குமேல் இருக்கிறார்கள்.

அந்த நாட்டில் இந்தியர்களின் தொகை சுமார் மூன்று லட்சம் என்பது இச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடத் தக்கது. இந்தியர்களும் சுதேசிகளும் ஐக்கிய மடைந்தே சத்தியாக்கிரகப் போரை நடத்தி வருகிறார்கள்.

அவர்களுடைய சத்தியாக்கிரகப் போர் நாளுக்கு நாள் விசுவ ரூபம் அடைந்து வருகிறது.

அதைக் கண்டு தென்னாப்பிரிக்க வெள்ளையர்களே பீதி அடைந்திருக்கிறார்கள். மலானின் நிறவெறி காரணமாக ஏற்படும் பிரளயத்தில் தாங்கள் மூழ்கி அதோகதியாகும்படி நேரலாம் என்று அவர்கள் நடுங்கி வருகிறார்கள்.

டாக்டர் மலானின் நெருங்கிய உறவினரான அடால்பு மலான் 'தீவட்டிப் படை' ஒன்றை ஆரம்பித்திருக்கிறார்.

"மலானின் புத்தி தெளியாவிடில், பலாத்காரத்தைக் கைக் கொண்டு அவரது கொட்டத்தை அடக்குவோம்" என்று அடால்பு மலான் அறிக்கை விடுத்திருக்கிறார்!

தென்னாப்பிரிக்காவிலே வெள்ளையர் வர்க்கத்தில் உள்ள இரண்டொரு மாகாணங்கள் கூட மலானை எதிர்க்கத் தொடங்கி யிருக்கின்றன.

* * *

எந்த நாட்டிலும் பெரும்பான்மையோரைப் போலவே சிறுபான்மை யோருக்கும் சகல உரிமைகளும் இருக்க வேண்டும். இதுதான் சர்வதேச நீதி, ஜனநாயக தர்மம்.

சிறுபான்மையோருக்குச் சம உரிமை அளிக்காத எந்தச் சர்க்காரையும் ஜனநாயக அரசாங்கம் என்று கூற முடியாது.

அப்படியிருக்க தென்னாப்பிரிக்காவில் அன்னியர்களும் சிறுபான்மையோருமான பத்து லட்சம் பேர், அந்த நாட்டின் புதல்வர்களான ஒரு கோடி பேரின் உரிமைகளைப் பறித்து, அவர்களைப் பலாத்காரமாக ஆட்சி புரிந்து வரும் அட்டூழியத்தை என்னவென்று சொல்லுவது!

உலகம் எங்கும் வயது வந்த சகலருக்கும் வாக்குரிமை உண்டு என்று விதி நிலைபெற்றுள்ள இந்த இருபதாம் நூற்றாண்டில், தென்னாப்பிரிக்காவிலே மாத்திரம் நிறவேற்றுமை காரணமாக ஒரு கோடி ஜனங்களுக்கு வாக்குரிமை, சம உரிமை எதுவும் இல்லை! இதைக் காட்டிலும் படு மோசமான நிலைமையைக் கற்பனை செய்து கொள்வதும் முடியாத காரியம்.

# அமெரிக்காவைப் பாருங்கள்

அமெரிக்காவுக்குப் பணக் கடவுளைத் தவிர வேறு கடவுள் இல்லை என்று கூறப்பட்ட காலம் உண்டு. செல்வத்தில் புரளும் அமெரிக்க மக்களுக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை இல்லை; அவர்களுடைய அரசியல், ராஜதந்திரம், வர்த்தகம் எல்லாம் நீதி, தர்மம் என்ற உயர்ந்த கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை; பண வருமானம் ஒன்றை மாத்திரமே முக்கியமாகக் கொண்டிருக்கிறது என்பதற்காகவே அவ்வாறு கூறி வந்தார்கள்.

ஆனால் அந்தக் காலம் மலையேறி விட்டது. குறிப்பாக, சென்ற மகா யுத்தத்திலிருந்து அமெரிக்கத் தலைவர்களின் பிரசங்கங்களில் கடவுள் நம்பிக்கை ததும்புவதைக் காணலாம்.

சென்ற மகா யுத்தத்தின்போது, யுத்தத்தில் வெற்றி பெற வேண்டும் என்று அமெரிக்காவெங்கும் நிறைந்துள்ள ஆலயங்களில் பிரார்த்தனைகள் நடந்த வண்ணமாக இருந்தன.

தங்களுக்கு அபரிமிதமான ஆயுத பலம் இருக்கிறது. தாங்கள் ஏன் கடவுளைச் சிந்திக்க வேண்டும் என்று அமெரிக்க மக்கள் இருக்கவில்லை.

அமெரிக்கத் தலைவர்களும் தாங்கள் ஜனநாயக தர்மத்தை நிலை நிறுத்துவதற்காக யுத்தத்தில் ஈடுபட்டிருப்பதால், தங்களுக்குக் கடவுள் வெற்றியை அளிப்பார் என்று கூறி வந்தனர்.

போரில் வெற்றி பெற்ற பின்னரும் அமெரிக்கர்கள் இறுமாந்து இருக்கவில்லை. அணுகுண்டு தான் தங்களுக்கு வெற்றியைக் கொடுத்தது என்று அதை வணங்க முற்படவில்லை!

அதற்குமாறாக நாடெங்கும் வெற்றிப் பிரார்த்தனைகள் நடத்தினார்கள்.

* * *

அமெரிக்காவில் அடுத்த நவம்பர் மாதம் நடைபெறப் போகும் ஜனாதிபதி தேர்தலுக்கு அந்த நாட்டில் உள்ள இரண்டு மாபெரும் கட்சியினரும் தங்கள் தங்கள் அபேட்சகர்களைத் தேர்தெடுத்து விட்டார்கள்.

அமெரிக்கக் குடியரசுக் கட்சி உலகப் பிரசித்தி பெற்று விளங்கும் ஜெனரல் ஐஸன் ஹோவரை ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகராகத் தேர்தெடுத்தது பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டிருந்தோம்.

சில தினங்களுக்கு முன் அமெரிக்க ஜனநாயகக் கட்சி அட்லாய் ஸ்டீவன்சன் என்ற பிரமுகரை அபேட்சகராகத் தேர்தெடுத்திருக்கிறது.

ஜனாதிபதித் தேர்தலில் ஐஸன்ஹோவரை எதிர்த்து நின்று வெற்றி பெறுவதற்குத் தகுதியானவர் தற்போதைய நிலையில் ஜனநாயகக் கட்சிக்குள் அவர் ஒருவர்தான் என்றே அவரைத் தேர்தெடுத்தார்கள்.

ஸ்டீவன்சன் ஐஸன்ஹோவரைப் போல் உலகப் பிரசித்தி பெற்றவர் அல்ல என்றாலும், உள் நாட்டில் இணையற்ற புகழ் பெற்றவர்.

ஒரு மாகாண கவர்னராக இருந்து யாராலும் ஒழிக்க முடியாத லஞ்சம் போன்ற ஊழல்களைச் சில மாதங்களில் ஒழித்துக் கட்டி அம்மாகாண நிர்வாகத்தைத் தூய்மைப் படுத்தியவர். எனவே மாகாண நிர்வாகத்தைத் திறம்பட நடத்தித் தூய்மைப் படுத்தியவர் தேச நிர்வாகத்தையும் சிறப்பாக நடத்துவது சாத்தியமே அல்லவா!

அதனாலேயே அமெரிக்க ஜனநாயகக் கட்சியினர் ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகராக ஸ்டீவன்சனைத் தேர்தெடுத்திருக்கிறார்கள்.

* * *

மேற்படி கட்சித் தேர்தல்களில் நிகழ்ந்த ஒரு விசேஷம் என்னவெனில், முக்கியமான அமெரிக்கத் தலைவர்கள் யாவரும் தங்கள் பிரசங்கங்களில் கடவுளிடம் தங்களுக்குள்ள தளரா நம்பிக்கையைப் பிரகடனப் படுத்தியதுதான்!

உலகத்தில் அமைதி நிலவ வேண்டுமாயின் கடவுள் தன்மையற்ற ஆட்சி எவ்விடத்திலும் இருக்கக் கூடாது. அத்தகைய அதர்ம ஆட்சியை உலகத்திலிருந்து ஒழிப்பதே அமெரிக்காவின் கடமையாக இருக்க வேண்டும் என்றார் வெற்றி வீரரும் மாபெரும் இராணுவத் தலைவருமான ஜெனரல் ஐஸன் ஹோவர்.

ஸ்டீவன்சன் தாம் அபேட்சகராகத் தேர்தெடுக்கப் பட்டதும் என்ன சொன்னார் தெரியுமா! "நான் தவறான வழியில் செல்லாது சரியான பாதையில் செல்லும்படி அருள்புரிய இறைவனைப் பிரார்த்தியுங்கள்" என்றார்.

"சிக்கல்களிலிருந்தும் சேற்றிலிருந்தும் அமெரிக்காவை ஆண்டவன் காப்பாற்றுவாராக" என்று ஜெனரல் மெக் ஆர்தர் பிரார்த்தித்தார்.

"உலக தர்மங்களையும் கடவுளையும் மறுக்கும் சர்வாதிகார ஆட்சியை உலகத்திலிருந்து ஒழித்துக் கட்டுவோம்" என்று ஜனாதிபதி ட்ருமன் கர்ஜனை செய்தார்.

அமெரிக்கா உலக நாடுகளுக்குக் கோடி கோடியாகத் தொகை கொடுத்து உதவும் சுபிட்சமான நிலையில் இருக்கிறது. அணுகுண்டுகளையும் 'ஹைட்ரஜன்' குண்டுகளையும் உற்பத்தி செய்து உலகத்தையே அழிக்கக் கூடிய ஆயுத வலிமையுடனும் விளங்குகிறது. அப்படியிருந்தும் அமெரிக்கத் தலைவர்கள் செல்வ பலத்தைக் காட்டிலும், ஆயுத பலத்தைக் காட்டிலும் கடவுள் நம்பிக்கையே உண்மையான பாதுகாப்பாகும் என்பதை உணர்ந்திருக்கிறார்கள். பல்வேறு அபிப்பிராய பேதம் உள்ளவர்கள்கூட அரசியல் மேடையிலே கடவுளிடம் தங்களுக்கு உள்ள தளரா நம்பிக்கையைப் பிரகடனப்படுத்தி யிருக்கிறார்கள்.

அதாவது செல்வத்தைக் காட்டிலும், யந்திர சாதனங்களைக் காட்டிலும், அணுகுண்டுகளைக் காட்டிலும் மேலான ஒரு சக்தி இருக்கிறது என்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். மதப் பிரசாரகர்களும் பாதிரிமார்களும்தான் கடவுளின் பெயரைச் சொல்ல வேண்டும் என்று அவர்கள் நினைக்கவில்லை.

ஆனால் இங்கே நாம் காண்பது என்ன!

ஜனங்களுக்கு உயிரையும் உணவையும் கொடுக்கக் கூடிய மழைக்காகக் கடவுளைப் பிரார்த்தியுங்கள் என்று ராஜாஜி கூறியதைச் சிலர் கேலி செய்தனர். மழைக்கும் கடவுளுக்கும் என்ன சம்பந்தம் என்று தர்க்க வாதம் புரிந்தனர். "சட்ட சபையில் கடவுளின் பெயரை எதற்காகக் குறிப்பிட வேண்டும்! இது என்ன பழைய மடமை!" என்று சில மேதாவிகள் கேட்டனர்.

அத்தகைய மேதாவிகளுக்கு என்ன பதில் கூற முடியும்! ஒரு வேளை 'அமெரிக்காவைப் பாருங்கள்' என்று பதில் சொல்லி வைக்கலாம்!



★ ★

- தமிழ்க் காவடியின் ஊர்வலம் விழாப்பந்தலை வந்தடைகிறது.
- டாக்டர் சுப்பராயன் கலைக்காட்சியைத் திறந்து வைக்கிறார்.
- ராஜாஜி பேசும் போது இருந்த சபை.
- ராஜாஜி விழாவைத் துவக்கி வைக்கிறார்.
- விழாவில் பங்கு கொண்ட பெண் தொண்டர்கள்.
- வாட்டூர் காவடி ஊர்வலத்தின் போது ஒரு காட்சி.

★ ★









★ ★

- ராஜாஜி ஔவையார் நாடகம் பார்க்கிறார்.
- இலங்கை மந்திரி ஸ்ரீ நடேசப் பிள்ளையும் அவர் மனைவியும்.
- பேராசிரியர் அருள் நந்தி பேசிக் கொண்டிருக்கிறார்.

★ ★







- ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் நாடக சபையாரின் சிவகாமியின் சபதம் நாடகத்தில் ஒரு காட்சி.
- ஔவையார் நாடகத்தில் போது ஔவைக்கு மாலையிட்டு மரியாதை செய்தனர்.
- கலைக் காட்சியைக் காண்பதற்கு நிற்கும் 'க்யூ' வரிசை.

★
★★




ஹில்மன் மிங்க்ஸ் வார விழாவை சென்னை சௌத் இந்தியா ஆட்டோ மொபைல் கார்ப்பொரேஷனில், போக்கு வரத்து மந்திரி டாக்டர் பி. கிருஷ்ண ராவ் அவர்கள் துவக்கி வைத்து, மேற்படி விழாவுக்கு விஜயம் செய்திருந்த பிரமுகர்களுடன், காட்சிக்கு வைக்கப்பட்டிருந்த ஹில்மன் மிங்க்ஸ் வண்டியைப் பார்வை யிடுகிறார்.



# சென்னை நகரில் தமிழ்த் திருவிழா

பகீரதன்

நிமிரென்று தமிழர்கள் தங்கள் தங்கள் மார்பை நிமிர்த்து பார்த்துக் கொண்டனர். சோழ நாட்டுத் தமிழரும் ஈழ நாட்டுத் தமிழரும் களிக் கூத்தாடினர். மலேயாத் தமிழர்களோ "ஆகா! பிரமாதம்! அற்புதம்!" என்றார்கள். பாண்டிய நாட்டுத் தமிழர்கள் பெருமை தாங்காது மகிழ்ந்து போனார்கள். சேர நாட்டுத் தமிழர்களும், தொண்டை நாட்டுத் தமிழர்களும் 'தோம்தோம்' என்று ஆடிப் பாடினர். சென்னை நகரத்துத் தமிழர்களோ தரையில் நிற்காமல் குதித்துக் கொண்டிருந்தனர். தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானம் "சென்னை தமிழருக்கே!" என்றது. பூந்தமல்லி நெடுஞ்சாலை "மதராஸ் பட்டினம் தமிழ் நாட்டுக்கே!" என்றது. சென்னைக் கடற்கரையோ "தமிழ் வாழ்க!" "தமிழ் வாழ்க!" என்று அலைமோதிக் கோஷமிட்டது.

தமிழ் மக்களும், தமிழ் அறிஞர்களும், தலைவர்களும், புலவர்களும், கவிஞர்களும், கலைஞர்களும், ஆராய்ச்சியாளர்களும், ஆசிரியர்களும், பாட்டாளிகளும், முதலாளிகளும், பாமரர்களும், படித்தவர்களும் திரளாகச் சேர்ந்து தொண்டை நாட்டில் தமிழ் விழாவைக் கொண்டாடியதால்தான் தமிழ் மக்கள் இவ்வளவு குதூகல மடைந்தனர்.

தொண்டை நாட்டுக்கு வந்த பெருமையைப் பற்றி மற்ற நாட்டுத் தமிழர்கள் அவ்வளவாகப் பொறாமைப் படவில்லை. பழந்தமிழ் நாட்டைச் சேர்ந்த சென்னைக்கு இத்தகைய சிறப்பு ஏற்பட்டது குறித்துப் பாண்டிய நாட்டுத் தமிழர்கள் தங்கள் பக்கத்திலிருந்த சேர நாட்டுத் தமிழர்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். ஈழ நாட்டுத் தமிழர்கள் கை கொட்டி மகிழ்ந்தார்கள். சோழ நாட்டுத் தமிழர்களோ வழக்கம் போல் எல்லாருக்கும் வயிறாரச் சாப்பாடு போட்டு வாழ்த்துக் கூறினார்கள். பிறகு எல்லாத் தமிழர்களும் ஒன்று சேர்ந்து தலை நகருக்கும் தமிழுக்கும் பல்லாண்டு பாடி மகிழ்ந்தார்கள்.

இந்த அருமையான நிகழ்ச்சிகள் எல்லாம் எங்கே நடந்தன தெரியுமா? "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு" என்று கவியரசர் பாரதி பெருமையுடன் கூறினாரே அந்தப் பெரியாரைப் பெற்றெடுத்த சென்னைமா நகரிலே நடந்தது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் ஆண்டு தோறும் நடத்திவரும் தமிழ்த் திருவிழா இந்த மாதம் 22 23, 24உ களில் சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் மகோன்னதமாக நடைபெற்ற விவரங்களைத் தமிழ்ப் பெருமக்கள் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். "மகோன்னதமாக நடைபெற்றது" என்றால் அது மிகைப் படுத்திக் கூறுவதாகாது. உண்மையிலேயே மகோன்னதமான வைபவமாகவேதான் தமிழ்த் தாயின் திருவிழா தமிழ் நாட்டின் தலை நகரிலே நடந்தேறியது.

முதல் நாள் 22உ வெள்ளிக் கிழமை மாலை. கடிகாரத்தில் "டாண்! டாண்!" என்று மணி ஐந்து முறை அடித்தது. கலை மணம் கமழும் நடராஜப் பெருமானின் திரு உருவத்துடன் விளங்கிய தமிழ் மேடைமீது தமிழ் இசைக்கும் தமிழ் விழாவுக்கும் மத்தகஜம்போல் முன் நின்று தொண்டாற்றி வரும் இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகரின் தமிழிசைக் கச்சேரியுடன் ஐந்தாம் தமிழ் விழா ஆரம்பமாயிற்று. எடுத்த எடுப்பிலேயே கச்சேரி களை கட்டி விட்டது. தமிழ் விழாவும் களை கட்டி விட்டது. இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் கானல் வரிப் பாடல்களை இனிமை ததும்பப் பாடும்போது விழாப் பந்தலில் நிறைந்திருந்த தமிழர்கள் தங்களை மறந்து சிரக்கம்பம் கரக்கம்பம் செய்து மகிழ்ந்தனர்.

தேசிகரின் கச்சேரிக்குப் பின் கலைக் கண்காட்சித் திறப்புவிழா நடந்தது. ஒவ்வொரு தமிழ் விழாவிலும் கலைக் காட்சியும் கலை நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய்வது வழக்கம்தான். ஆனால் சென்ற வருஷம் யாழ்ப்பாணத்தில் நடந்த கலைக் காட்சியானது எல்லாருடைய கவனத்தையும் கவர்ந்து விட்டது. தமிழ் நாட்டுக்கும் ஈழ நாட்டுக்கும் கலைப் பாலம் அமைத்து இரண்டு நாடுகளின் கலாச்சாரத் தொடர்பையும் எடுத்துக் காட்டியிருந்ததாகப் பாராட்டினார்கள். அதையும் மிஞ்சி விடும்வண்ணம் உயர்ந்த முறையில் இவ்வாண்டு கலைக்காட்சி ஏற்பாடு செய்திருந்தார்கள். சென்ற ஆண்டு தமிழ் விழாவில் கலைக் காட்சியின் பெருமைக்கு முக்கிய காரணமாயிருந்தவரான ஸ்ரீ வி. எம். நரசிம்மன் அவர்கள்தான் இந்த வருஷத்துக் கலைக் காட்சியையும் அமைத்திருந்தார். இந்தக் காட்சியைப் பார்ப்பதற்கு முன்பெல்லாம் ரேஷன் கடையில் அரிசி வாங்குவதற்கு 'க்யூ' வரிசையில் நிற்பார்களே அப்படி வரிசை வரிசையாக மக்கள் நின்று பார்த்து மகிழ்ந்தார்கள். முதல் நாளைவிட மறுநாள் அதிகமாக நின்று பார்த்தார்கள். மூன்றாவது நாள் முடிவே தெரியாதபடி 'க்யூ' வரிசை நீண்டு வளர்ந்திருந்தது.

கலைக் காட்சி பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. கலைப் பகுதி கம்பரைக் குறிக்கும் படத்திலிருந்த ஆரம்பமாயிற்று. மனித குலம் வளர்ந்து கலையும் நாகரிகமும் பெற்று அது உலகம் முழுவதும் பரவிய பண்பாட்டைக் காண்பித்தார்கள். கோவில்களின் வளர்ச்சியையும் அதன் வரலாற்றையும் காண்பித்தார்கள். சரித்திர கால முற்பகுதிக்கு

அழைத்துச் சென்று அதன் மென்மையைக் காண்பித்தார்கள். மதுரை, கூடல், அழகர் கோயிலின் விக்ரகங்களைப் பார்த்து மகிழும்படி செய்தார்கள். தர்மபுர ஆதீனத்து ஏட்டுச் சுவடிகள், சோழர் காலத்துப் படங்கள், ஜாவா சிற்பங்களின் புகைப் படங்கள், பழைய காலத்து அழகிய ஓவியங்கள் மூலம் தமிழரின் நாகரிகத்தைக் காண்பித்தார்கள். தமிழ் எழுத்துக்களின் வடிவ வளர்ச்சியின் வரலாற்றைத் தெரிந்து கொள்ளச் செய்தார்கள். சிலாசாசனப் பகுதி, நகர வரைப் படங்கள், தமிழ் இலக்கியத்தில் காணப்படும் பொறிகள், கோயில்களில் இருந்த பழைய நாகரிக சாமான்கள், விக்ரகங்களின் பல கோணப் புகைப் படங்கள், பண்டைய கால ஆயுதங்கள் எல்லாம் தமிழ் மக்களின் பெருமையை எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தன. சங்ககாலம், இடைக்காலம், பிற்காலம் (பாரதியார் வரையில்) உள்ள தமிழ் இலக்கியச் செல்வங்கள் தமிழ் மொழியின் வளத்தை எடுத்து விளம்பிக் கொண்டிருந்தன.

மீனாட்சி அம்மன் கோயிலிலிருந்து வந்திருந்த சந்தனச் சாமான்கள், தந்தப் பிரதிமைகள், அடாடா! பார்த்து மகிழ வேண்டிய காட்சி. அதில் ஒரு தந்தப் பிரதிமை இருந்தது. சௌந்தர்ய தேவதை பிரதிமை உருவில் வந்து விட்டாளோ என்று எண்ணும்படி இருந்தது. கண்ணைப் பறிக்கும் அந்தப் பிரதிமையைப் பார்த்தால் போதும், மனத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் உண்டாகி மகிழ்விக்கின்றன. அந்தப் பிரதிமையின் அழகைப் பருகிய வண்ணம் எத்தனையோ பேர் நின்று கொண்டிருந்தார்கள். வேலை விடக் கூர்மையானது அந்தப் பிரதிமையின் கண்கள். அந்தக் கண்களில்தான் என்ன மருட்சி! முகத்தில்தான் என்ன பாவம்! "ஆகா! என்னே கைத்திறமை!" என்று தம்மையும் அறியாமல் எத்தனையோ பேர் கூறியதைக் காதாரக் கேட்டேன்.

இன்னும் கோயில் தோற்றப் படங்கள், பாரத நாட்டின் கலைப் பொக்கிஷங்களைக் காட்டும் படம், கல் முகவீணையுடன், பாழடைந்த ஹம்பி கோயில் தோற்றமும் காட்சியளித்தன. கடைசியாகக் காட்சிச்சாலையை விட்டு வெளியே போகும்போது கையெழுத்துக் கலையை "தப்புடு" என்ற மாணவன் அழகழகாக, மணிமணியாக முத்துப்போல் எழுதி வைத்திருந்ததைச் சற்றுக் குனிந்து பார்த்து விட்டுத்தான் வெளியே சென்றார்கள்.

இந்த அற்புதமான கலைக்காட்சியைத் திறந்து வைப்பதற்கு முன் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் டாக்டர் சுப்பராயன் கலையின் பெருமையை விவரித்துக் கூறினார். தமிழரின் பூர்வீக பண்பாட்டின் சிறப்பையும் அதைப் போற்றிப் பாதுகாக்க வேண்டிய அவசியத்தையும் நன்கு விளக்கினார். தமிழரின் நாகரிகம் பாலி, இந்தோனேஷ்யா, கம்போடியா முதலிய நாடுகளில் பரவிக் கிடப்பதையும் எடுத்துக் காட்டினார். ஓவியக் கலையிலும் பரதநாட்டியக் கலையிலும் தமிழர்கள் உலகம் போற்றும் மகத்தான காரியங்கள் செய்திருப்பதை அனுபவ வாயிலாக எடுத்துரைத்தார். கடைசியாக எல்லா விழாக்களிலும் நடப்பதுபோல் இருந்த இடத்திலிருந்தே கலைக் காட்சியைத் திறந்து வைக்காமல் காட்சிச்சாலைக்கே சென்று அதன் வாசலில் இருந்த நாடாவைக் கழற்றிவிட்டு, கூடியிருந்த மக்களின் கரகோஷங்களுக்கு இடையில் திறந்து வைத்தார். காட்சிச்சாலைக்குள் சென்று காட்சிப் பொருள்களையும் ஒன்று விடாமல் பார்த்து மகிழ்ந்து வியந்தார்.

மறுநாள் இலக்கியப் பகுதிக்குத் தலைமை வகிக்க இருந்த ஸ்ரீ பி. டி. ராஜன் தாம் அவசர காரியமாக மதுரைக்குப் போவதால் "என் 'அண்ணன்' ஸ்ரீ சுப்பராயனைத் தலைமை வகிக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்" என்றார். தம்முடைய பாண்டி நாட்டின் பெருமையையும் தமிழரின் சிறப்பையும் எடுத்துக் கூறி மதுரையில் ஆரம்பமாகும் எதுவும் நன்றாகவே நடக்குமாகையால், தமிழ் விழாவும் தமிழ் வளர்ச்சிக் கழகமும் நன்றாகவே நடக்கும் என்று நம்பிக்கை ஊட்டினார். ஆனால், அவர் அப்படித் தமிழரின் பெருமையையும் தமிழ்நாட்டின் பண்பையும் எடுத்துச் சொல்லும்போது அசல் வெள்ளைக்காரனைப் போலவே சூட்டும் கோட்டும் அணிந்து கொண்டிருந்ததைப் பார்த்த யாழ்ப்பாணத்துத் தமிழர் ஒருவர் "என்ன ஐயா! தமிழரின் பெருமை பேவண்டிக் கிடக்கிறது! தமிழ் விழாவுக்கு வரும்போதாவது தமிழ் உடையை அணிந்து வந்திருக்கக் கூடாதா! தமிழ் விழாவுக்காகச் சொந்த வேலையை ஒரு நாளைக்காவது தள்ளி வைத்திருக்கக் கூடாதா!" என்று குறைப்பட்டுக் கொண்டே இருந்தார்.

ஆம்! தமிழ் விழாவுக்காகக் கடல் கடந்து வந்திருக்கும் யாழ்ப்பாணத் தமிழரின் தமிழ் உள்ளம் அப்படி நினைப்பது நியாயம்தானே! ஸ்ரீ பி. டி. ராஜன் விழாவில் கலந்து கொண்டு இலக்கியப் பகுதிக்குத் தலைமை வகித்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும் என்று சில தமிழ் அன்பர்களும் கருதினார்கள்.

இரவு ஒன்பது மணிக்கு மேல் குமாரி கமலாவின் நடனக் கச்சேரி ஆரம்பமாயிற்று. நடனத்தைப் பார்க்க டிக்கட் வாங்கிக் கொண்டு வந்திருந்த ஏராளமான தமிழ் மக்களுடன் போட்டி போட்டுக் கொண்டு வருணபகவானும் வந்துவிட்டார். மழையைக்கூட லட்சியம் செய்யாமல், ஒலிபெருக்கியின் கோளாறையும் பொருட்படுத்தாமல் அமைதியாக நின்று கொண்டு ரசித்த தமிழ்ப் பெருமக்களின் பண்பாட்டை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அப்படி அவர்கள் மெய் மறக்கும்படி நடனமாடிய குமாரி கமலாவுக்கும், கமலாவின் நடன ஆசிரியரான வழுவூர் ஸ்ரீ ராமையாப் பிள்ளை அவர்களுக்கும் நடனத்தைக் கண்டு களித்த ஆயிரக்கணக்கான தமிழ்ப் பெருமக்களின் சார்பாக நன்றி கூறுகிறேன்.

** ** **

மறுநாள் 23ம் சனிக்கிழமை. வழக்கத்தை விடச் சற்று முன்னதாகவே சூரியன் வான வீதியில் தோன்றி விட்டான். மயிலாப்பூர் திருவள்ளுவர் ஆலயத்தின் முன், மக்கள் ஆனந்தமாகக் கூடியிருந்ததைப் பார்த்தான். பார்த்துக் கண்களை அகலத் திறந்து சுடர்விட்டுப் பிரகாசித்தான். தங்களை வாழ்விக்க வந்த தமிழ்த் தெய்வத்தை கோலாகலமாக ஊர்வலம் விடக் கூடியிருந்த மக்களைப் பார்த்து மகிழ்ந்தான்.

மயிலாப்பூர் திருவள்ளுவர் கோயிலிலிருந்து தமிழ் ஏட்டுச் சுவடியின் ஊர்வலம் புறப்பட்டது. தமிழைப் பற்றி உரத்துப் பேசத் துணிவின்றி மெலிந்த குரலில் முனகிக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் வானளாவும்படி "தமிழ் வாழ்க!" என்று கோஷம் புரிந்தார்கள். சதா வெறிச்சென்று காட்சி தரும் திருவள்ளுவரின் திருக் கோவிலைச் சுற்றித் தமிழ் அன்பர்கள் அலை மோதிக் கொண்டிருந்தார்கள்.

அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்த யானை ஜம்மென்று நிமிர்ந்து தன் நீண்ட துதிக்கையை ஆட்

டிக் கொண்டு தமிழ் நடை போட்டு முன்னால் செல்ல, ஆண்மணிகளும் பெண்மணிகளும், தலைவர்களும் புலவர்களும் அணி வகுத்துப் பின் நின்று "தமிழ் வாழ்க!" "தமிழ் வாழ்க!" என்று கோஷிக்க அதற்குப் பின்னால் திருவிடைமருதூர் வீருசாமிப் பிள்ளை கோஷ்டியாரின் இனிமையான நாதஸ்வரம் ஒலிக்க வெள்ளி ரதத்தில் தங்கப் பீடத்தில் தமிழ்ச்சுவடிகளை ஏற்றி வைத்து, மலர் மாலைகள் சூட்டித் தமிழ்த் தெய்வத்தைச் சென்னை நகரத்து வீதிகள் வழியாக எடுத்து வந்த காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

மயிலாப்பூரில் இருந்து தேனாம்பேட்டை விழாப் பந்தல் வரையில் இருக்கும் நீண்ட தெருக்களில் எல்லாம் தமிழரின் பண்பாட்டுக்கு இணங்க தண்ணீர் தெளித்து, தோரணங்கள் கட்டியிருந்தனர். அந்தத் தோரணங்களின் நடுவில் "தமிழ் வளர்க" "தமிழைப் போற்றுவோம்" என்று எழுதியிருந்த அட்டைகள் தொங்கிக் கொண்டிருந்தன. ஆங்காங்கு மக்கள் பக்தி மரியாதையுடன் தமிழ்த் தெய்வத்தை வணங்கிய காட்சி மறக்க முடியாத காட்சி. பார்த்து மகிழ வேண்டிய அருமையான நிகழ்ச்சிகள். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்து கொண்டு வெள்ளம் போல் தமிழ் மக்கள் பின் தொடர ஊர்வலம் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தின் ஜுக்தாம் தமிழ் விழாப் பந்தல் வாசலுக்கு வந்த போது கூட்டத்தினர் "தமிழ் வாழ்க!" என்று முழங்கியதைப் பார்த்தால் இந்தக் கூட்டத்தில் இருக்கும் மக்களுக்கு நிஜமென்று பித்துப் பிடித்து விட்டதோ என்று எண்ணும்படி இருந்தது. மித மிஞ்சிய மகிழ்ச்சியும் ஒரு மாதிரி பைத்தியம்தானே! இந்த மகிழ்ச்சி மக்கள் மத்தியில் தமிழ் விழா நடந்த மூன்று தினங்களிலும் நீடித்து நிலைத்து இருந்தது.

** ** **

திருவிழாவுக்குச் சிறப்பு அளித்த அம்சங்களில் முக்கியமானது தமிழுக்காகத் தம் வாழ்நாளெல்லாம் உழைத்துப் பாடுபட்டு வரும் தமிழ் முனிவர் திரு. வி. க. தலைமை தாங்க, நமது முதல் அமைச்சர் ராஜாஜி அவர்கள் விழாவைத் துவக்கி வைத்ததாகும். அன்றைய தினம் விழாப் பந்தலில் கூடியிருந்த கூட்டம் பார்த்துப் பூரித்துப் பெருமை யடைய வேண்டிய பண்பாடு நிறைந்த கூட்டம். பெண்மக்கள் பகுதியில் நிறைந்திருந்த ஆயிரக் கணக்கான பெண்மணிகளைப் பார்த்தபோது தமிழ் விழாவுக்கு இவ்வளவு பெண்மணிகள் வந்து கலந்து கொள்கிறார்களா! என்று கேட்டு வியக்கத்தான் வேண்டியிருந்தது. அதெல்லாவற்றையும் விட விழா நிகழ்ச்சிகளின்போது ஆண்கள் நிறைந்திருந்த பகுதியை விடப் பெண்கள் பகுதியில் அமைதி நிலவியிருந்ததைக் குறிப்பிடவேண்டும். சுமார் பத்தாயிரம்பேர் உட்காரும் வசதியுள்ள விழாப் பந்தலில் தமிழ் அன்பர்கள் நெருக்கியடித்துக் கொண்டு அமர்ந்திருந்ததுடன் பந்தலுக்கு வெளியிலும் திரள் திரளாகக் கால் கடுக்க நின்று கொண்டும் இருந்தனர்.

மேடைக்குத் தலைவர் திரு. வி. க. அவர்களைத் தமிழ்ப் பெரும் புலவர்கள் கைலாகு கொடுத்து அழைத்து வந்த போது "தமிழ் வாழ்க!" என்று தமிழ் மக்களின் பெருங்கூட்டம் ஆர்ப்பரித்தது. இந்தியாவின் முன்னணியில் தமிழ் நாட்டுக்குத் தனிச் சிறப்பு வாங்கித் தந்த ராஜாஜி வந்தபோது "ராஜாஜி வாழ்க!" என்று வாயார வாழ்த்திக் கரகோஷம் செய்து மகிழ்ந்தனர். தமிழின் சிறப்பை அறிந்து கொள்ளத் தமிழ் நாட்டுப் பாணியில் வேஷ்டி கட்டிக் கொண்டு சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா வந்திருந்தார். சேய் நாடான இலங்கையிலிருந்து தமிழ் விழாவின் சிறப்புக் கலைப் பகுதிக்குத் தலைமை வகிப்பதற்காக வந்திருந்த இலங்கை மந்திரி ஸ்ரீ நடேசப் பிள்ளை அவர்கள் தூய வெள்ளை ஆடை உடுத்தி, தலையில் கம்பீரமான தலைப்பாகை அணிந்து உட்கார்ந்திருந்தார். இன்னும் இலங்கையில் இருந்து பேராசிரியர் அருள்நந்தி, யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கத்துக் காரியதரிசி ஸ்ரீ சரவணமுத்து, ஈழகேசரி ஆசிரியர் ஸ்ரீ இராஜ அரியரத்தினம், ஸ்ரீ அம்பிகைபாகன் போன்ற பத்திரிகை ஆசிரியர்களும், இன்னும் குடும்பத்துடன் வந்திருந்த ஏராளமான இலங்கைத் தமிழ் அன்பர்களும், மலேயா தமிழ் மக்களும், சென்னை மாகாணத்துத் தமிழ் மந்திரிகளும், செட்டி நாட்டு அன்பர்களும், சென்னை நகரப் பிரமுகர்களும் சேர வந்திருந்து தமிழ் அன்னையை அரியணை யேற்ற ஆர்வத்துடன் கூடியிருந்தார்கள்.

மேடை மீது ஒரு புறம் நம் முதல் அமைச்சர் ராஜாஜியும், இன்னொருபுறம் சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசாவும் வீற்றிருக்க நடுவில் விழாத் தலைவர் திரு. வி. க. அமர்ந்திருந்த காட்சியைப் பார்த்துத் தமிழ் மக்கள் பூரித்துப் போனார்கள்.

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும் குமாரி ராதாவும் சேர்ந்து கடவுள் வணக்கம் பாட விழா ஆரம்பமாயிற்று. "அருள் புரிவாய் கருணைக் கடலே" என்று தொடங்கி "வாழிய செந்தமிழ்" என்று பாடி முடிக்கும் வரையில் ஒவ்வொரு பாட்டும் கூடியிருந்த பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்களை மெய்யுருகச் செய்துவிட்டது. "சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!" என்ற அடி இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது என்று விழா முடிந்த பிறகுகூட ஒரு தமிழன்பர் சொல்லிக் கொண்டிருந்தார். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பாடி முடிக்கும் வரையில் அந்த மாபெரும் சபை நிசப்தமாக இருந்தது. அந்த நிசப்தத்தைப் பிறகு விழா முடியும் வரையில் பார்க்கவே முடியவில்லை.

"தமிழகத்தின் தலைநகரமான சென்னையில் நடைபெறும் தமிழ்த் திருவிழாவுக்கு உங்கள் அனைவரையும் மனம் உவந்து வரவேற்கிறேன்" என்று கூறி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் தமிழ்ப் பெருமக்கள் அனைவரையும் வரவேற்றார். நாட்டு மொழியைப் பாதுகாக்க வேண்டியது இயற்கை நியதி என்று வற்புறுத்தினர். இயற்கை நியதிக்கு மாறுபட்டுக் காரியங்கள் செய்தால் "விபத்து" ஏற்படும் என்று நினைவூட்டினர். "தமிழ்மொழி மாறு இளமை வாய்ந்தது; கொள்ளக் குறையாது வளம் செறிந்தது. ஆனால் அதைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டிய பொறுப்பு நமக்கு உண்டு. அதைப்பற்றிக் கவலைப்படாமல் இருந்தால் தமிழ் மொழிக்கு எவ்வித நஷ்டமும் இல்லை. நஷ்டப் படுவோர் தமிழ் மக்களாகிய நாமே யாவோம்" என்று தமிழ் மொழியின் பெருமையை எடுத்துக் கூறி அதோடு தமிழ் மக்களுக்கு ஒரு எச்சரிக்கையும் விடுத்தார். 'தொண்டை நாடு சான்றோர் உடைத்து" என்ற ஔவையின் வாக்கை எடுத்துக் காட்டிச் சென்னையின் சிறப்புகளை யெல்லாம் எடுத்துக் கூறினர். என் அருகில் அமர்ந்திருந்த சென்னை நகரத்திலேயே பிறந்து வளர்ந்த ஒரு தமிழ் அன்பர் "அடாடா! சென்னை நகரம் இவ்வளவு சிறப்புக்களை உடையதா!"

என்று கேட்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். மற்ற தமிழர்களும் நிமிர்ந்த மார்பையும் பீடுகொண்ட நடையையும் பெற ஆரம்பித்து விட்டனர்.

இன்னும் தமிழ் விழாவின் உயர்ந்த நோக்கத்தையும், தமிழரின் முன்னேற்றத்தையும் பற்றிச் சொன்னார். சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னால் தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்கள்,

"தமிழினைப்போல் உயர்ந்தமொழி
தரணியெங்கும் கண்டதில்லை
தமிழரைப்போல் மொழிக்கொலையில்
தலைசிறந்தார் எவருளரே!"

என்று உள்ளம் நொந்து, நெஞ்சம் குமுறி, தமிழ் மக்களின் மனப் போக்கை எடுத்துக்காட்டி இடித்துக் கூறிய பாடலை நினைவூட்டினார். அப்போது இருபது வருஷங்களுக்கு முந்தைய தமிழகத்தையும் இன்றைய தமிழகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து இப்பொழுது இருக்கும் தமிழ் மக்களின் மனம் மாறி யிருக்கும் அற்புதத்தைத் தமிழ் அன்பர்கள் கண்டு மகிழ்ந்தனர்.

வரவேற்புக் கழகத் தலைவர் ஸ்ரீ பக்தவத்ஸலத்தின் வரவேற்புரை தமிழ் மணம் கமழ்ந்துகொண்டிருந்தது. "ஸ்ரீ பக்தவத்ஸலத்தின் பிரசங்கம் மிகச் சிறந்தது. ஆராய்ச்சி மிக்கதாக அமைந்திருக்கிறது. இவ்வளவு அழகாகத் தமிழ் எழுதக் கூடியவர் தமிழ் எழுதாமல் வேறு துறையில் காலத்தை வீணாக்கி விட்டாரே!" என்று ராஜாஜி அவர்களே பாராட்டினார் என்றால் அவர் வரவேற்புரை பிரசங்கத்தைப் பற்றி நான் வேறு என்ன கூறப் போகிறேன்.

"தமிழ் வாழ்க!" "ராஜாஜி வாழ்க!" என்ற விண்ணதிரும் கோஷங்களுக் கிடையில் ராஜாஜி விழாவைத் துவக்கி வைக்க எழுந்தார். "நம் தேசத்துப் பூர்வீக வழக்கப்படி திருக்குலத்தாரை அழைத்து விழாவை ஆரம்பிக்கச் செய்திருக்கிறார்கள்" என்று பேச்சை ஆரம்பிக்கும்போதே மக்கள் கைதட்டி ஆரவாரிக்க ஆரம்பித்து விட்டனர். அன்று முக்கியமாகப் பேசிய விஷயங்கள் சென்னை நகரைப் பற்றியும் தமிழைப் பற்றியும் தமிழரைப் பற்றியும் தான். வழக்கம்போல் உபமான உபமேயங்களுடன் சிரிக்கச் சிரிக்கப் பேசினார். சிக்கல் நிறைந்த விஷயங்களைச் சிக்கலறுத்துப் பேசினார். திரு வி. க. வின் மெலிந்துபோன உடலைப் பார்த்துத் துயரப்பட்டார். "அவரைக் காண்பவர்கள் யாரும் நாஸ்திகராக இருக்க முடியாது" என்று கூறிவிட்டுப் பின்னர், "இயற்கை நியதியில், இந்த உடலானது இப்படி மாறுபட்டு வருவதே வழக்கமாக இருக்கிறது!" என்று கூறித் தம்மைத் தேற்றிக் கொண்டதாகக் கூறினார். தமிழைப் பசுவாக்கிக் காண்பித்தார். அதற்குத் தீனி போட்டால்தான் பால் கறக்கலாம் என்று சொன்னபோது சபையோர் கடகடவென்று கைதட்டி மகிழ்ந்தனர். "மாம்பழம் சாப்பிடும் போது பலாப்பழத்தை நினைக்கலாமா!" என்று கேட்டுத் தமிழைப் பற்றி நினைக்கும்போது பிற மொழிகளை நினைத்துக் கோபப்பட வேண்டாம் என்றார். தமிழன்னைக்குச் செய்யும் பூஜை ஏகாக்ர சித்தத்துடன் செய்யும் பூஜையாக இருக்க வேண்டும் என்றார். குறள் பெரிதா வேதம் பெரிதா என்று ஒப்பிடுபவர்கள் இரண்டையும் 'அறியாதவர்களே' என்று கூறினார். எழுத்துச் சீர்திருத்தத்தைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசும்போது "என்னைப்பற்றித் திட்டுவதானாலும் சரியாக 'லை' போட்டுத் திட்டட்டுமே" என்று அவர் ஹாஸ்யம் சொட்டக் கூறியபோது அம் மாபெரும் சபை ஒருதரம் குலுங்கச் சிரித்து மகிழ்ந்தது. ராஜாஜி அவர்கள் தமிழ் எழுத்தின் அழகைப் பார்த்து எப்படி அனுபவித்து மகிழ்கிறார்கள்! என்பது மிக நன்றாகத் தெரிந்தது.

தமிழுக்குச் சேவை செய்த தெலுங்கர்களைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டு இப்பொழுது சென்னையில் இருக்கும் தெலுங்கர்களைப் பற்றிச் சொன்னார். 'ஒகடி, ரெண்டு' என்று சொல்லுவார்கள். அதற்கு மேல் பேசவேண்டுமானால் தமிழ்தான்! இப்படிப் பட்டவர்கள் தெலுங்கர்களாகி விடுவார்களா? சென்னை நகரில் உள்ளவர்களில் தெலுங்கு பேசுபவர்களில் மிகப் பெரும்பாலோர் தமிழர்தான் என்பதைப் புள்ளி விவரங்களோடு நகைச்சுவையுடன் கூறினார். சென்னை நகரம் தமிழ் நாட்டைச் சேர்ந்ததுதான் என்று கூறிவிட்டு ஆந்திரர்களைப் பார்த்துப் பயப்பட வேண்டாம் என்றும் அறிவுறுத்தினார். தெலுங்கர்களைப் பார்த்துச் சென்னை என்கிற தூணை விட்டால் தான் ஆந்திர மாகாணம் கிடைக்கும் என்பதைப் புரியும்படி விளக்கினார். இந்தச் சமயங்களில் எல்லாம் சபையோர் உற்சாக வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தனர். என் அருகில் அமர்ந்திருந்த தமிழாசிரியர் "அப்பா! சென்னை நகரத்தைப் பற்றிய கவலை விட்டது" என்று மிகவும் திருப்தியுடன் சொல்லி ஒரு பெருமூச்சு விட்டு நிமிர்ந்து உட்கார்ந்தார்.

கடைசியாக அவர் கூறிய விஷயம்தான் மிக முக்கியமானது. தமிழும் தமிழ்ப் பண்பாடும் வளர வேண்டும் என்று பாடுபட வேண்டியவர்கள் கவனிக்க வேண்டியது. "மகா ஆபாசமாக எழுதி மக்களை நாசம் செய்யும் பத்திரிகைகள் சில இருக்கின்றன. அவைகளைப் படிக்க வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டு "இத்துடன் நான் விழாவைத் திறந்து வைப்பதாக வைத்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்" என்று கூறினார். அதை அப்படியே ஆமோதித்து வரவேற்பதுபோல அந்த மாபெரும் தமிழ் அவையில் இடிமுழக்கம் போல் கரகோஷம் எழுந்தது.

அவர் பேசிக் கொண்டிருந்தபோது அங்கு கூடியிருந்த தமிழ் மக்கள் சில சமயம் மெய் மறந்து உட்கார்ந்திருந்தனர். சில சமயம் கலகலவென்று சிரித்தனர். சில சமயம் உணர்ச்சி மயமாகி இருந்தனர். இந்தமாதிரி அவர் பேசி முடியும் வரையில் விழாப் பந்தலில் மக்கள் தங்களை மறந்து இருந்தனர்.

ராஜாஜியின் தமிழ் விழாப் பேச்சைக் கேட்டவர்கள் பாக்கியம் செய்தவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அவ்வளவு தெளிவாகத் தந்தை மகனுக்கு எடுத்து உரைப்பதுபோல் பல விஷயங்களை எடுத்துச் சொன்னார். உறங்கிக் கிடந்த தமிழ் மக்களை ஊக்குவித்தார். மக்கள் மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படும்படி செய்தார். அஞ்சி அஞ்சிச் சாவது அறியாமை என்பதை வெகு அழகாக எடுத்து விளக்கினார். ஹாஸ்யமாகவும், உணர்ச்சியுடனும், உற்சாகத்துடனும் அவர் கூறிய அறிவுரையைக் கேட்டுத் தமிழ் மக்கள், அதிலும் குறிப்பாகச் சென்னை நகரத்துத் தமிழ் மக்கள் தலை நிமிர்ந்து நடக்க ஆரம்பித்து விட்டனர். பயத்தை விட்டுக் காரியத்தில் இறங்க ஆரம்பித்து விட்டனர் என்பது விழா முடிந்த மூன்று தினங்களுக்குப் பிறகுகூட மக்கள் ராஜாஜியின் பேச்சைப் பற்றிப் பேசிக் கொள்வதிலிருந்து நன்றாகத் தெரிந்தது. (அடுத்த இதழில் முடியும்)




## பூர்வ கதை

இராஜ ராஜ சோழன் என்று சரித்திரத்தில் புகழ் பெற்ற அருள்மொழி வர்மன், சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இரண்டாவது மகன். குழந்தைப் பிராயத்தில் அவன் காவேரி நதியில் இராஜ குடும்பத்தாருடன் படகில் சென்று கொண்டிருந்தபோது வெள்ளத்தில் மிதந்த பூவை எடுக்கப் பார்த்து நதியில் விழுந்து முழுகிவிட்டான். குழந்தையைக் காணாமல் எல்லாரும் பதறி நின்ற சமயத்தில் ஒரு பெண்மணி வெள்ளத்திலிருந்து கையில் குழந்தையோடு எழுந்தாள். அவனைப் படகில் விட்டு விட்டு உடனே மறைந்தாள். காவேரித் தாயே குழந்தையைக் காப்பாற்றிக் கொடுத்ததாக அனைவரும் எண்ணினார்கள். ஆதலின் அரண்மனையிலும் சோழ நாடெங்கும் அவனுக்குப் 'பொன்னியின் செல்வன்' என்ற பெயரும் வழங்கி வந்தது.

பொன்னியின் செல்வன் சோழ நாட்டு மக்களின் உள்ளங் கவர்ந்த செல்வனாயுமிருந்தான். அவனைக் காட்டிலும் சோழ நாட்டு மக்களின் அபிமானத்துக்கு அதிக பாத்திரமாயிருந்தவள் அவன் தமக்கை குந்தவை தேவி. 'இளைய பிராட்டி' என்று மக்களால் மரியாதையுடன் போற்றப்பட்ட குந்தவை தன் தம்பியிடம் அளவில்லா அன்பு வைத்திருந்தாள். அருள்மொழிக்குச் சிங்காதன உரிமை இல்லையென்றாலும் அவன் ஒரு நாள் மகோந்நத நிலைமையை அடையப் போகிறான் என்று பூரண நம்பிக்கை வைத்திருந்தாள். பழையாறை அரண்மனையில் அவளுடைய தனித்த அன்புக்கு உரியவளாக வளர்ந்து வந்த கொடும்பாளூர் இளவரசி வானதியைப் பொன்னியின் செல்வனுக்கு மணம் புரிவிக்க அவள் விரும்பினாள்.

அருள்மொழி வர்மன் 'இளையபிராட்டி' இட்ட கோட்டைத் தாண்டாமல் நடந்து வந்தான். அவள் தூண்டுதலின் பேரில் இலங்கைப் போர்க்களத்துக்குச் சென்று வீரப் புகழ் பெற்றான். இலங்கை அரசன் மகிந்தன் மலை நாட்டில் ஓடி ஒளிந்த பிறகு சோழ நாட்டு வீரர்களுக்குச் சிறிது காலம் அங்கே வேலை இல்லாமலிருந்தது. அச்சமயம் அருள்மொழிவர்மன் இலங்கை மக்களுக்கு உகந்த பல காரியங்களைச் செய்தான். முக்கியமாக, அநுராதபுரத்தில் இடிந்து தகர்ந்து கிடந்த பழைய புத்த விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் புதுப்பித்துக் கட்டினான். இதனால் மகிழ்ச்சி



பெற்ற புத்த சங்கத்தின் ஒரு பகுதியார் அவனுக்கு இலங்கை அரசுரிமையை அளித்து முடிசூட்ட முன் வந்தார்கள். அவ்வாறு வலிய வந்த அரசுரிமையைப் பொன்னியின் செல்வன் மறுத்து விட்டான்.

இலங்கையில் வெறி கொண்டவன் போல் அலைந்து திரிந்து கொண்டிருந்த ஊமை மூதாட்டி ஒருத்தியை அருள்வர்மன் சந்தித்தான். அவனை தான் தன்னைக் காவேரி வெள்ளத்திலிருந்து எடுத்துக் காப்பாற்றியவள் என்பதை அறிந்தான். அவள் எழுதிக் காட்டிய சித்திரங்களின் மூலம் அவளுடைய வரலாற்றையும் ஓரளவு தெரிந்து கொண்டான். அவனுடைய • தந்தை சுந்தர சோழர் வாலிபப் பிராயத்தில் இலங்கையை அடுத்திருந்த ஒரு தீவில் தன்னந்தனியாக வந்து ஒதுங்கிச் சில காலம் வசிக்க நேர்ந்ததையும், அச்சமயம் இந்த ஊமை ஸ்திரீயிடம் அவர் காதல் கொண்டு வாழ்ந்ததையும் தெரிந்து கொண்டான். அந்த ஊமை ராணிக்குப் பிறந்ததாக அவன் அறிந்த இரண்டு குழந்தைகள் யாராயிருக்கக் கூடும் என்பதையும் ஒருவாறு ஊகித்துக் கொண்டான்.

சுந்தர சோழ சக்கரவர்த்தி பாரிச வாயு விஷல் பீடிக்கப்பட்டுத் தஞ்சை அரண்மனையில் படுத்த படுக்கையாய்க் கிடந்தார். வானத்தில் சில காலமாகத் தூமகேது ஒன்று காட்சி அளித்துக் கொண்டிருந்தது. இந்த உற்பாதம் இராஜ குடும்பத்தில் ஒருவருக்கு விபத்து நெருங்கியுள்ளதற்கு அறிகுறி யென்று எண்ணிச் சோழ நாட்டு மக்கள் கவலை கொண்டிருந்தார்கள். சுந்தர சோழரின் இறுதி நெருங்கி விட்டதாகப் பலரும் நம்பினார்கள். அடுத்தாற் போல் பட்டம் யாருக்கு என்பதைப் பற்றி நாடெங்கும் சர்ச்சை நடந்து வந்தது.



சுந்தர சோழரின் மூத்த குமாரனும் பட்டத்து இளவரசனுமாகிய ஆதித்த கரிகாலன் அச்சமயம் காஞ்சி நகரில் இருந்தான். அவன் வீராதி வீரன். மதுரையின் கடைசி மன்னனாகிய வீர பாண்டியனைப் போர்க் களத்தில் முறியடித்த பிறகு அவனைத் தொடர்ந்து சென்று அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டு பிடித்து அவன் தலையை வெட்டித் தஞ்சை புரிக்குக் கொண்டு வந்தவன்.

காஞ்சியில் அவன் சுந்தர சோழரின் பிரதிநிதியாகவும் வடதிசைச் சேநாதிபதியாகவும் விளங்கினான். ஆனால் அவன் உள்ளத்தில் நிம்மதி இல்லாமலிருந்தது. இதற்குக் காரணமா யிருந்தவள் நந்தினி என்னும் பெண்.

ஆதித்தன் சிறுவனாயிருந்த போது அவனோடு கூடவிளையாடிய சிறுமி நந்தினி. அவள் ஒரு கோவில் அர்ச்சகர் வீட்டில் வளர்ந்து வந்தவள். பின்னர் அவள் பாண்டிய நாட்டுக்குப் போய் விட்டாள். வீர பாண்டியன் இறுதி நாளில் அந்தப் பெண்ணின் வீட்டில் தான் ஒளிந்திருந்தான். ஆதித்த கரிகாலன் பாண்டியனைக் கொல்ல வாளை ஓங்கிய போது நந்தினி குறுக்கிட்டு அவனைக் கொல்ல வேண்டாமென்று மன்றாடினாள். ஆதித்த கரிகாலன் அவளுடைய வேண்டுகோளை உதாசீனம் செய்து வீரபாண்டியனைக் கொன்றான். அது முதல் ஆதித்தனுடைய கனவிலும் நனவிலும் நந்தினியின் கண்ணீர் ததும்பிய முகம் அடிக்கடி தோன்றி அவனை வருத்திக் கொண்டிருந்தது.

அச்சமயம் சோழ சாம்ராஜ்யத்தில் பழுவூர் சிற்றரசர்களான பெரிய பழுவேட்டரையரும் சின்னப் பழுவேட்டரையரும் பேரதிகாரம் படைத்திருந்தார்கள். பல போர்களில் ஈடுபட்டு உடம்பில் அறுபத்து நாலு போர்த் தழும்புகளைப் பெற்றிருந்த பெரிய பழுவேட்டரையர் சோழ நாட்டின் தனாதிகாரி; அவர் வைத்ததே சோழ நாட்டில் சட்டமாக இருந்தது. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சாவூர்க் கோட்டையின் தளபதி. இந்தச் சகோதரர்களின் அனுமதியின்றி யாரும் சுந்தர சோழரைப் பார்க்கவும் முடியாமலிருந்தது.

வீரபாண்டியனுடைய மரணத்துக்குச் சில நாளைக்குப் பிறகு நந்தினி வயது முதிர்ந்தவரான பெரிய பழுவேட்டரையரை மணந்து கொண்டாள். அவளுடைய சௌந்தரியத்துக்கும் அவ்விடம் இருந்த அபூர்வமான காந்த சக்திக்கும் கிழவர் அடிமையானார். இன்னும் பலரும் அவளுடைய மோகன சக்திக்கு உட்பட்டார்கள். அவளது தூண்டுதலால் கிழவர் ஆதித்த கரிகாலனிடமும் அவனுக்கு உடன் பிறந்தாரிடமும் துவேஷம் கொண்டார். சுந்தர சோழருக்கும்



பிறகு ஆதித்த கரிகாலனுக்குப் பதிலாக மதுராந்தகத் தேவனுக்கு முடி சூட்டுவதென்று தீர்மானித்தார். அத்தீர்மானத்துக்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய மற்றும் பல சிற்றரசர்களின் ஆதரவையும் பெற்றார்.

மதுராந்தகத் தேவன் சுந்தர சோழரின் பெரிய தந்தையான சிவஞான கண்டராதித்தரின் புதல்வன். கண்டராதித்தரின் இரண்டாம் மனைவி செம்பியன் மாதேவி சிவ பக்தியே உருவானவள். கண்டராதித்தர் காலஞ்சென்ற போது மதுராந்தகர் சிறு குழந்தை. அவனைச் சிவபக்திச் செல்வனாகச் செம்பியன் மாதேவி வளர்த்து வந்தாள். மதுராந்தகனும் இளம் வயதில் சிவபக்தியில் ஈடுபட்டு உலக வாழ்க்கையில் பற்றற்று விளங்கினான். சின்னப் பழுவேட்டரையரின் மகளை மணந்த பின்னர், நந்தினியின் தூண்டுதலினால், அவனுக்குச் சாம்ராஜ்யம் ஆளும் ஆசை உதித்து அது வெறியாக முற்றி முதிர்ந்து விட்டது.



மதுராந்தகனுடைய சிங்காதன உரிமையைப் பழுவேட்டரையர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் ஆதரித்து நின்றார்கள்.

ஆனால் சோழ நாட்டில் செல்வாக்கு மிகுந்த இன்னும் இரண்டு சிற்றரசர்களான திருக்கோவலூர் மலையமானும் கொடும்பாளூர் பெரிய வேளார் பூதி விக்கிரம கேசரியும் இதை ஏற்றுக் கொள்ள மறுத்து எதிர்த்தார்கள். அவர்கள் சுந்தர சோழரின் புதல்வர்களின் கட்சியில் உறுதியாக நின்றார்கள்.



இதையெல்லாம் ஓரளவு ஊகித்துணர்ந்த சுந்தர சோழர் தாம் கண்மூடிய பின் சாம்ராஜ்யம் சின்னாபின்னம் ஆவதைத் தடுக்க விரும்பினார். இதன் பொருட்டுத் தமது இரு புதல்வர்களையும் தஞ்சைக்குத் தருவித்து ஒரு சமரச ஏற்பாடு செய்துவிட ஆசைப்பட்டார். மதுராந்தகனுக்கே சிம்மாசனத்தை உரிமையாக்கி விடவும் அவர் சித்தமாயிருந்தார். அதை மதுராந்தகனுடைய அன்னையாகிய செம்பியன் மாதேவி ஒப்பவில்லை. மதுராந்தகனுடைய மனத்தை இராஜ்ய ஆசையிலிருந்து திருப்ப அந்தமூதாட்டி முயன்றாள்.

ஆதித்த கரிகாலன் பழுவேட்டரையர்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த தஞ்சைக்குச் செல்ல விரும்பவில்லை. காஞ்சியில் அவன் பொன் மாளிகை கட்டி அதில் வந்து சில காலம் தங்கியிருக்கும்படி தந்தைக்கு ஓலை அனுப்பினான். ஓலை எடுத்துச் சென்றவன் வந்தியத் தேவன் என்னும் வீர வாலிபன். அவன் வழியில் தன் தோழன் கந்தமாறனைச் சந்திப்பதற்காகக் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் ஒரு நாள் இரவு தங்கினான். அங்கே ஆதித்த கரிகாலனுக்கு எதிராக நடந்து கொண்டிருந்த சதியைப் பற்றித் தெரிந்து கொண்டான். அவ்விடத்திலேயே ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனிடம் அவனுக்கு அறிமுகம் ஆயிற்று. இந்த ஆழ்வார்க்கடியான் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயரின் அந்தரங்க ஒற்றன் என்பது பிற்பாடு தெரிந்தது.

முதன் மந்திரியான அன்பில் அநிருத்தப் பிரம்ம ராயர் என்பவர் சுந்தர சோழச் சக்கரவர்த்தியுடன் இளம் பிராயத்திலிருந்து நட்புரிமை பூண்டவர். சோழ குலத்தைச் சேர்ந்த சகலருடைய அந்தரங்கங்களையும் நன்கறிந்தவர். சோழ சாம்ராஜ்யம் மிகப் பரந்து விரிந்து மகோந்நதம் அடைய வேண்டும் என்று அவர் கனவு கண்டு வந்தார். சோழ நாட்டு வீரர்கள் கங்கையைக் கடந்து சிந்து நதிக்கரை வரை சென்று இமயமலைக்கு அப்பாலிருந்து படையெடுத்து வரும் அநாகரிக சாதியாரைத் தடுத்து நிறுத்துவதில் உதவ வேண்டும் என்றும் கருதினார். இராஜ்ய உரிமை சம்பந்தமாக எழுந்திருக்கும் தகராறு அவருடைய நோக்கத்தைப் பாழ்படுத்து மென்று அறிந்து, அந்த விபத்தைத் தடுப்பதற்கு அல்லும் பகலும் பாடுபட்டு வந்தார். சிற்றரசர் கோஷ்டி எதிலும் சேராமல் சமரச முடிவு காண்பதற்கு

அவர் விரும்பினார். நாட்டில் நடப்பதெல்லாம் அறிந்திருந்தும் அவர் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை.

தஞ்சைக்கு ஓலை எடுத்துச்சென்ற வந்தியத் தேவன் வழியில் குடந்தை சோதிடரின் வீட்டில் இளைய பிராட்டி குந்தவையைச் சந்தித்தான். முதல் சந்திப்பிலேயே அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் அன்பு கொண்டனர். பிறகு அன்பு வளர்வதற்குச் சில சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. குந்தவையின் விருப்பத்தின்படி வந்தியத் தேவன் கடல் கடந்து இலங்கை சென்றான். அருள்மொழி வர்மனைச் சந்தித்து அவனிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான்.

"பொன்னியின் செல்வ! இராஜ்யத்துக்குப் பேரபாயம் வந்திருக்கிறது. உடனே புறப்பட்டு வரவும்" என்று அதில் எழுதியிருந்தது. இளைய பிராட்டியிடம் அளவில்லாத பக்தி விசுவாசம் கொண்டிருந்த இளவரசன் உடனே புறப்பட ஆயத்தமானான். ஆனால் அதே சமயத்தில் அவனுக்கு இன்னும் இரு அழைப்புக்கள் வந்திருந்தன. ஆதித்த கரிகாலன் அனுப்பிய பார்த்திபேந்திரன் அவனைக் காஞ்சிக்கு அழைத்துச் செல்ல விரும்பினான். சுந்தர சோழரின் அநுமதியின் பேரில் பழுவேட்டரையர்கள் இளவரசனைச் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கப்பல்களை அனுப்பியிருந்தார்கள். இளைய பிராட்டி குந்தவையிடம் குரோதம் கொண்டிருந்த பழுவேட்டரையர்கள் பொன்னியின் செல்வன் குந்தவையைச் சந்திப்பதை விரும்பவில்லை.



இளவரசன் அருள்மொழி வர்மன் தந்தையின் கட்டளைக்கே முதல் மரியாதை செலுத்த விரும்பிப் புறப்பட்டான். வழியில் நடுக் கடலில் சுழற்காற்று விபத்துக்குக் கப்பல்கள் உள்ளாயின. வந்தியத் தேவனைக் காப்பாற்றுவதற்காகப் பொன்னியின் செல்வன் கப்பலிலிருந்து கொந்தளித்த கடலில் குதிக்க நேர்ந்தது. இருவரும் பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண்ணால் காப்பாற்றப் பட்டார்கள்.

நடுக் கடலில் மிதந்தபோதே இளவரசன் கொடிய குளிர்க் காய்ச்சலுக்கு உள்ளானான். அவனைப் பூங்குழலியும் அவளுடைய அத்தை மகன் சேந்தன் அமுதனும் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

வந்தியத் தேவன் இந்தச் செய்தியைப் பழையாறையிலிருந்த குந்தவைப் பிராட்டியிடம் தெரிவித்தான். அதே சமயத்தில் ஆதித்த கரிகாலனைக் கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு விருந்துக்கு அழைத்திருப்பதாகவும் தெரிய வந்தது. அவ்விருந்துக்குப் பெரிய பழுவேட்டரையர் நந்தினியுடன் போவதாகவும் செய்தி கிடைத்தது. இந்தச் சந்திப்பினால் ஏதாவது விபரீதம் நேரிடக் கூடும் என்று குந்தவையும் அநிருத்தரும் அஞ்சினர்கள். கூடுமானால் அந்தச் சந்திப்பைத் தடுக்கவும், தடுக்கமுடியா விட்டால் ஆதித்த கரிகாலருடன் உடனிருந்து பாதுகாக்கவும் வந்தியத் தேவனை அனுப்பினார்கள்.



வந்தியத் தேவன் அன்றிரவு திருப்புறம்பயம் கிராமத்துப் பள்ளிப்படைக் காட்டில் மற்றொரு பெரும் மர்மமான சதியைப்பற்றி ஓரளவு அறிந்து கொண்டான். அங்கே நந்தினியும் ரவிதாஸன் முதலிய மந்திரவாதிகளும் இருந்தார்கள். ஒரு சின்னஞ் சிறு பிள்ளையும் இருந்தான். அந்தப் பிள்ளையைச் சிம்மாசனத்தில் அமர்த்தினார்கள். மற்றவர்கள் அவனைச் சூழ்ந்திருந்து சபதம் எடுத்துக் கொண்டார்கள். அந்தப் பிள்ளையிடம் ஒளிவீசிய கூரியவாள் ஒன்று அளித்தார்கள். அந்தவாளை அவன் நந்தினியிடம் கொடுத்தான். நந்தினி சபதத்தைத் தானே நிறைவேற்றுவதாக ஒப்புக் கொண்டாள்.



ரவிதாஸன் முதலியவர்கள் வந்தியத் தேவனை அங்கேயே பலி கொடுத்து விட விரும்பினார்கள். ஆனால் நந்தினி அதைத் தடுத்தாள். அவனை அவ்விடத்திலேயே கட்டிப் போட்டு விட்டுச் சென்றார்கள். ஆழ்வார்க்கடியான் கானா



மூக சைவன் வேடம் தரித்து வந்து வந்தியத் தேவனை அங்கிருந்து அழைத்துச் சென்றான்.

காளாமுகர் கூட்டத்துக்குத் தன்னந் தனியாகப் புறப்பட்ட மதுராந்தகனை வழியில் குதிரை மிரண்டு தள்ளி விட்டுப் போய் விட்டது. மரத்தடியில் விழுந்து கிடந்த மதுராந்தகனை முதன் மந்திரி அநிருத்தர் எடுத்து அழைத்துச் சென்றார்.

குந்தவையும் வானதியும் நாகைப்பட்டினத்துக்கு அருகிலிருந்த ஆனைமங்கலத்துக்குச் சென்றார்கள். தந்தி மண்டபம் என்னும் மிடத்தில் அவர்கள் இளவரசன் அருள்மொழி வர்மனைச் சந்தித்தார்கள். நாட்டின் குழப்பமான நிலையை முன்னிட்டு இன்னும் சில நாட்கள் இளவரசன் சூடாமணி விஹாரத்திலேயே இருக்க வேண்டும் என்று குந்தவை வற்புறுத்தினாள். அவர்கள் மூவரும் கலகலவென்று சிரித்து மகிழ்வதைச் சற்றுத் தூரத்தில் கால்வாயில் படகிலிருந்த பூங்குழலி கேட்டு மனம் எரிந்தாள். சேந்தன் அமுதன் அவளைச் சாந்தப்படுத்துவதற்கு முயன்றான்.

பொன்னியின் செல்வன் கடலில் முழுகி விட்டதாகப் பரவிய வதந்தியினால் சோழ நாடு முழுவதும் அதற்கு அப்பாலும் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது.

முதல் அத்தியாயம்

# கெடிலக் கரையில்

திருமுனைப்பாடி நாட்டை வளப் படுத்திய இனிய நீர்ப் பெருக்குடைய நதிகளில் கெடிலம் நதியும் ஒன்று. அப்பர் பெருமானை ஆட்கொண்ட இறைவன் எழுந்தருளியிருந்த திருவதிகை வீரட்டானம் இந்த நதிக் கரையில் இருக்கிறது. சுந்தரமூர்த்தியைத் தடுத்தாட்கொண்ட பெருமான் வாழும் திருநாவலூர் இந்நதியின் அருகிலேதான் இருக்கிறது. இந்த இரண்டு க்ஷேத்திரங்களுக்கும் மத்தியில் தொண்டை நாட்டிலிருந்து நடு நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் செல்லும் இராஜபாட்டை அந்த நாளில் அமைந்திருந்தது. இராஜபாட்டை கெடில நதியைக் கடக்கும் துறை எப்போதும் கல கல வென்று இருக்கும். நதிக் கரையில் உள்ள மரங்களில் பறவைகளின் குரல்களும் அவை இறகை அடித்துக்கொள்ளும் சத்தமும் கேட்டுக் கொண்டிருக்கும். பிரயாணிகள் அங்கே வண்டிகளிலிருந்து மாட்டை அவிழ்த்து விட்டு விட்டுக் கட்டுச் சாதம் உண்பார்கள். உண்ணும்போது அவர்கள் விளையாட்டாக வானில் எறியும் சோற்றைக் காக்கைகள் வந்து அப்படியே கொத்திக் கொண்டு செல்லும். நதியின் வெள்ளத்தில் தவறி விழும் சோற்றை மீன்கள் வந்து கொத்திக் கொண்டு போகும். இவற்றை யெல்லாம் பார்க்கும் இளம் சிறார்கள் கை தட்டி ஆரவாரித்தும், 'ஆஹா' என்று வியப்பொலிகள் செய்தும், கலகல வென்று சிரித்தும், தங்கள் குதூகலத்தை வெளியிடுவார்கள்.

ஐப்பசி மாதம் ஆரம்பத்தில் கெடில நதியில் வழக்கத்தைவிட அதிகமாகவே வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. இதனால் உச்சி வேளையில் அங்கே கட்டுச் சாதம் அருந்துவதற்காகத் தங்கிய பிரயாணிகளின் ஆரவார ஒலிகளும் அதிகமாயிருந்தன. அந்த ஒலிகளெல்லாம் அமுங்கிப் போகும்படியான ஒரு பெரும் ஆரவாரம் திடீரென்று சற்றுத் தூரத்தில் சாலையில் எழுந்தது. கேட்டுப் பிரயாணிகள் வியப்புற்றார்கள். அவர்களில் சிலர்





கரையிலேறிப் பார்த்தார்கள். முதலில் புழுதிப் படலம் மட்டுமே தெரிந்தது. பிறகு யானை, குதிரை, பல்லக்கு, பரிவட்டம் ஏந்துவோர் முதலிய இராஜ பரிவாரங்கள் வருவது தெரிந்தது. சிறிது அருகில் அப்பரிவாரங்கள் நெருங்கி வந்ததும் கட்டியக்காரர்களின் முழக்கம் தெளிவாகக் கேட்டது.



"பன்னிரண்டாம் பிராயத்தில் போர்க்களம் புகுந்த வீராதி வீரர், வீர பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி, இரட்டை மண்டலத்தார் சொப்பனத்தில் கண்டு அஞ்சும் சிங்கம், தொண்டை மண்டலாதிபதி, வடதிசை மாதண்ட நாயகர், மூன்று உலகமுடைய சுந்தர சோழ சக்கரவர்த்தியின் திருமகனார், ஆதித்த கரிகால சோழ மகாராஜா வருகிறார்! பராக்!"

இடி முழக்கக் குரலில் எட்டுத் திசையும் எதிரொலி செய்யும்படி எழுந்த இந்த கோஷத்தைக் கேட்டதும் கொடில நதித்துறையில் இருந்தவர் அனைவரும் அவசர அவசரமாகக் கரையேறினார்கள். அத்தகைய வீராதி வீரனைக் காண வேண்டுமென்ற ஆவலுடன் நதித்துறையில் நடுவில் வழி விட்டு விட்டு இருபுறமும் அவர்கள் ஒதுங்கி நின்றார்கள்.

கட்டியக்காரர்கள், எக்காளம் ஊதுவோர், பரிச்சின்னம் ஏந்துவோர் ஆகியவர்கள் முதலில் வந்து தண்ணீர்த் துறையை அடைந்தார்கள்.

**ப**ரிவாரங்களுக்குப் பின்னால் மூன்று குதிரைகள் ஒன்றின் பக்கம் ஒன்றாக வந்தன. மூன்று குதிரைகள் மீதும் மூன்று இளம் வீரர்கள் வீற்றிருந்தார்கள். அவர்களைத் தூரத்தில் பார்த்த போதே ஜனங்கள் அவர்களைச் சுட்டிக் காட்டி இன்னார் இன்னவர் என்று பேசத் தொடங்கினார்கள். "நடுவில் உள்ள குதிரை மீது வருகிறவர் தான் ஆதித்த கரிகாலர்! பொற் கிரீடத்தைப் பார்த்தவுடனே தெரியவில்லையா? வெய்யில் படும்போது எப்படி அக் கிரீடம் ஜொலிக்கிறது!" என்றான் ஒருவன்.



"இந்தக் கிரீடத்தைப் போய்ச் சொல்லப் போகிறாயே? கரிகால் வளவன் அணிந்திருந்த மணி மகுடத்தை இவர் சிரஸில் தாங்கும்போதல்லவா பார்க்க வேண்டும்? அது கோடி சூரியப் பிரகாசமாகக் கண்கள் கூசும்படி ஜொலிக்குமாம்!" என்றான் இன்னொருவன்.

"அது கரிகால் வளவன் கிரீடம் அல்ல, தம்பி! அப்படிச் சம்பிரதாயமாகச் சொல்வதுதான். பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் செய்த மணிமகுடத்தைத்தான் இப்போது சுந்தர சோழர் அணிந்திருக்கிறார். இன்னும் எத்தனை நாளைக்கோ, தெரியவில்லை!" என்றான் மற்றொருவன்.

"சுந்தர சோழரின் வாழ்நாளை இப்படித்தான் சில காலமாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அவர் சிரஞ்சீவியாயிருப்பார் என்று தோன்றுகிறது!" என்றான் முதலில் பேசியவன்.

"நன்றாயிருக்கட்டும். அவர் உயிரோடிருக்கும் வரையில் நாடு நகரமெல்லாம் குழப்பமில்லாமலிருக்கும்!"

"அப்படியும் சொல்லுவதற்கில்லை. பொன்னியின் செல்வனைக் கடல் கொண்டு விட்டதாகச் செய்தி வந்ததிலிருந்து சோழ நாடெங்கும் ஒரே அல்லோல கல்லோலமாயிருக்கிறதாம். எப்போது சண்டை மூளுமோ என்று அங்கிருந்து வந்தவர்கள் எல்லாம் சொல்லி வருகிறார்கள்."



"யாருக்கும் யாருக்கும் சண்டை? எதற்காகச் சண்டை?"

"பழுவேட்டரையர்களுக்கும் கொடும்பாளூர் வேளாருக்கும் சண்டை மூளும் என்று சொல்கிறார்கள். அப்படியொன்றும் ஏற்படாமல் தடுப்பதற்காகத்தான் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் சிற்றரசர்கள் கூடுகிறார்களாம். ஆதித்த கரிகாலரும் அங்கேதான் போகிறாராம்."

"குதிரைகள் நெருங்கி வந்து விட்டன. இரைந்து பேசாதீர்கள்!" என்று ஒருவன் எச்சரித்து விட்டு, "இளவரசர் ஆதித்த கரிகாலரின் முகம் எவ்வளவு வாட்ட மடைந் திருக்கிறது பார்த்தாயா?" என்று கேட்டான்.

"அவர் முகம் வாட்ட மடைந்தில்லாமல் எப்படியிருக்கும்? ஆதித்த கரிகாலருக்குத் தம்பியின் பேரில் பிராணன். அப்படிப்பட்ட தம்பியைப் பற்றித் தகவல் தெரியவில்லை யென்றால் தமையனுக்கு வருத்தமா யிராதா? தந்தையோ நடமாட்ட மில்லாம லிருக்கிறார்!"

"இதெல்லாம் உலகத்தில் இயற்கை, தம்பி! இளவரசருடைய முகவாட்டத்துக்குக் காரணம் இவையெல்லாம் அல்ல. இரட்டை மண்டலத்தார் மீது படையெடுத்துப் போக வேண்டும் என்று கரிகாலருக்கு ஆசை. அது கைகூடவில்லையே என்று தான் கவலை!"

"அது ஏன் கைகூடவில்லை? யார் இவரைப் படையெடுத்துப் போக வேண்டாம் என்று தடுக்கிறார்கள்!"

"வேறு யார்? பழுவேட்டரையர்கள் தான்! படையெடுப்புக்கு வேண்டிய தளவாட சாமக் கிரியைகள் கொடுக்க மறுக்கிறார்களாம்!"

"ஏதேதோ இல்லாத காரணங்களையெல்லாம் கற்பித்துச் சொல்லுகிறார்கள். உண்மைக் காரணம் உங்கள் ஒருவருக்கும் தெரியவில்லை" என்றான் ஒருவன்.

"எல்லாம் தெரிந்தவனே! உண்மைக் காரணத்தை நீதான் சொல்லேன்!" என்று இன்னொருவன் கேட்டான்.

"ஆதித்த கரிகாலர் யாரோ ஒரு பாண்டிய நாட்டுப் பெண் மீது காதல் கொண்டிருந்தாராம். இளவரசர் வடபெண்ணைப் போருக்குச் சென்றிருந்த போது பெரிய பழுவேட்டரையர் அப்பெண்ணை மணந்து கொண்டு விட்டாராம். அவள் தான் இப்போது பழுவூர் இளைய ராணியாக விளங்கிச் சோழ நாட்டில் சர்வாதிகாரம் செலுத்துகிறாள். அதிலிருந்து ஆதித்த கரிகாலரின் மனமே பேதலித்துப் போய் விட்டதாம்!"

"இருக்கலாம்; இருக்கலாம். உலகத்தில் எல்லாச் சண்டைகளுக்கும் யாராவது ஒரு பெண் தான் காரணமாயிருப்பாள் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள் அல்லவா?"

"எந்தப் பெரியவர்கள், தம்பி, அப்படிச் சொல்லியிருக்கிறார்கள்? சுத்தப் பைத்தியக்காரத்தனம்! இளவரசர் ஒரு பெண்ணை விரும்பினார் என்றால், அவள் போய் ஒரு அறுபது வயதுக் கிழவனை மணந்து கொள்ளுவாளா? சொல்லுகிறவர்கள் சொன்னால் கேட்பவர்களுக்கு மதி இல்லையா?"

"அப்படியானால் ஆதித்தகரிகாலருக்கு இன்னும் கலியாணம் ஆகாமலிருப்பானேன்? நீர்தான் சொல்லுமே?"

"சும்மா இருங்கள்! இதோ நெருங்கி வந்து விட்டார்கள். இளவரசருக்கு வலது புறத்தில் வருகிறவன்தான் பார்த்திபேந்திர பல்லவன் போலிருக்கிறது. இடது புறத்தில் வருகிறவன் யார்? வாணர் குலத்து வந்தியத்தேவனா?"

"இல்லை; இல்லை! கடம்பூர் சம்புவரையர் மகன் கந்தமாறன். ஓலை கொடுத்து அனுப்பினால் இளவரசர் ஒருவேளை வரமாட்டார் என்று சம்புவரையர் தம் மகனையே அவரை அழைத்துவர அனுப்பி யிருக்கிறார்."

"இதிலிருந்தே, ஏதோ விஷயம் மிக முக்கியமானது என்று தெரிகிறது."

"அந்த முக்கியமான விஷயம் இராஜரீக சம்பந்தமானதாகவும் இருக்கலாம். அல்லது கலியாண சம்பந்தமானதாகவும் இருக்கலாம். ஆதித்த கரிகாலருக்குத் திருமணம் ஆகாதிருக்கும் வரையில் சிற்றரசர்கள் அவரை வலை போட்டுப் பிடிக்க முயன்று கொண்டு தானிருப்பார்கள். முதன் முதலில் அவரை மணந்து கொள்ளும் பெண் சோழ சாம்ராஜ்யத்தின் சிங்காதனத்தில் அமரும் பாக்கியம் பெறுவாள் அல்லவா?"

மேற்கண்டவாறெல்லாம் கெடில நதிக்கரையில் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்ற ஜனங்கள் பலவிதமாகப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

மூன்று குதிரைகளும் வந்து தண்ணீர்க் கரையோரம் நின்றன.

குதிரைகளுக்குப் பின்னால் வந்த ரதம் சற்று அப்பால், அரச மரத்தடியில் நின்றது. அந்த ரதத்தில் எண்பது பிராயமான வீரக் கிழவர் திருக்கோவலூர் மலையமான் இருந்தார்.

தண்ணீர்க் கரை ஓரத்தில் குதிரை மேலிருந்த வண்ணம் ஆதித்த கரிகாலன் திரும்பி அவரைப் பார்த்தான். (தொடரும்)



# நல்ல சந்தர்ப்பம்!

ஸோமாஸ்

ராமுவுக்கு எப்பொழுதும் தன்னைப் பற்றிய பெருமை அதிகம். அதற்குத் தகுந்த காரணம் இருந்தது. அவன் ஒரு மிராசுதார் குடும்பத்தைச் சேர்ந்தவன். நிறைய நிலபுலன்கள் இருந்தன. பொழுது போவதற்காகச் சென்னைக்கு வந்து ஒரு கண்டிராக்டரிடம் அமர்ந்தான். இந்த உத்தியோக வாழ்க்கையின் நிமித்தம் மனைவியுடன் சென்னையில் தனிக் குடித்தனம் போட்டான்.

புத்திர வாஞ்சையின் காரணமாக அவன் தாயார் உத்தமமான காவேரி ஸ்நானத்தைக் கூடத் தியாகம் செய்து விட்டுப் பிள்ளையிடம் வந்து சேர்ந்தாள்.

ராமுவுக்கு நண்பர்கள் அதிகம். அவன் வீட்டில் எப்பொழுது பார்த்தாலும் ஒரு பொதுக் கூட்டம் தயாராக இருக்கும். அந்தக் கூட்டத்திற்கு நிரந்தரத் தலைவர் ராமு தான் என்று சொல்ல வேண்டியதில்லை. ஒரு நாளைக்கு நாலைந்து தடவை டிரஸ் மாற்றுவதும் மாற்றிய டிரஸ்ஸைப் பத்து தடவை கண்ணாடியில் பார்த்து மகிழ்வதும் நண்பர்களோடு காப்பியும் டிபனும் சாப்பிட்டுக் கொண்டு அரட்டை அடிப்பதும்தான் ராமுவின் தினசரி வேலை.

ராமுவின் உத்தியோகத்தைப் பற்றி இரண்டொரு வார்த்தை சொல்லாவிட்டால் அவனைப் பற்றி எழுதிப் பிரயோஜனம் இல்லை.

காலையில் எழுந்ததும் கண்டிராக்டர் குப்புசாமியின் கார் ராமுவின் வீட்டு வாசலுக்கு ஆஜராகும். கார் ஹாரன் சத்தம் கேட்டதும் ராமு அவசரப்பட மாட்டான். மெதுவாக அலங்காரம் செய்து கொண்டு புறப்பட ஆயத்தம் செய்வான். வேண்டுமென்றே ஒவ்வொரு காரியத்தையும் மிகவும் தாமதமாகச் செய்து, ஒரு தடவைக்கு முப்பது தடவையாகத் தலை வாரிக் கண்ணாடியில் பார்த்து மகிழ்ந்து ஒரு மாதிரி புறப்படுவான்.

"ஏண்டாப்பா, ராமு! கார் வந்து ரொம்ப நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறதே! இன்னும் நீ புறப்படவில்லையா?" என்று அம்மா ஆரம்பிப்பாள்.

"இருக்கட்டுமே, அம்மா! அதனால் ஒன்றும் குடி முழுகிப் போய் விடாது. நம் வீட்டு வாசலில் காத்துக் கொண்டிருப்பதனால் அந்தக் காரின் சொந்தக்காரரான கண்டிராக்டருக்கு மதிப்பு உயருமே தவிரக் குறைந்து விடாது!" என்று அலட்சியமாகச் சொல்லி விட்டு ராமு சிரிப்பான்.

அந்தக் கண்டிராக்டர் ராமுவினிடம் இவ்வளவு மதிப்பும் மரியாதையும் வைத்திருந்ததற்குக் காரணம், பணக்காரனான ராமுவின் உதவி அவருக்கு எல்லா விதத்திலும் தேவையாயிருந்ததுதான். பெண் யானையைக் காட்டி ஆண் யானையை மயக்கிப் பிடிப்பது போல் கொஞ்சமாவது பணத்தைக் காட்டினால் தானே இந்த உலகத்தில் பணம் சம்பாதிக்க முடிகிறது!

ராமுவின் தாயாருக்கு அவனுடைய வீண் பெருமைகளும் அசட்டுக் கௌரவமும் கொஞ்சங்கூடப் பிடிப்பதில்லை.

"ராமு, இதெல்லாம் என்னடா கூத்து? பட்டணத்துக்கு வந்ததற்கு அடையாளம் நாலு பெரிய மனிதர்களைச் சிநேகம் பிடித்துக் கொண்டு அவர்களோடு சேர்ந்து பழக வேண்டும். அதை விட்டு விட்டு இந்த வீண் கும்பலைச் சேர்த்துக் கொண்டு பொழுதை வீணாகக் கழிக்கிறாயே! உன் பிள்ளை வேறு இப்பொழுதே பிடித்து உன் மாதிரியே ஆரம்பிக்கிறான். பள்ளிக்கூடத்துக்குக் கூட அவன் சரியாய்ப் போய் வருகிறானா என்று எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. வீட்டுக்கு வந்து ஒரு நாள் கூட அவன் பள்ளிக் கூடப் பாடத்தைப் படித்தான் என்பதே கிடையாது. எப்பொழுது பார்த்தாலும் குதி போட்டுக்கொண்டு ஏழெட்டுப் பையன்களோடு எங்கெல்லாமோ சுற்றுகிறான்! அவனைக் கண்டித்து வளர்க்க உனக்குத் துப்பு இல்லை. உனக்குக் குடும்ப விஷயங்களிலேயே அக்கறை இல்லையே!" என்று அவள் பல தடவை சொல்லி அலுத்துக் கொண்டிருக்கிறாள்.

ஆனால் ராமுவுக்கு வர வர அம்மா சொல்லுகிறதையெல்லாம் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க முடிவதில்லை. தனக்கும் குடும்பப் பொறுப்பு உண்டு என்பதைக் காட்டி விட வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தான். அதற்கு ஏற்ற சமயம்

எப்பொழுது கிடைக்கும் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

ராமு எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்தச் சந்தர்ப்பமும் ஒரு நாள் வந்து சேர்ந்தது.

ராமுவின் பத்து வயதுப் பிள்ளை வேணு தன் பள்ளிக் கூடத்துப் 'பிராகிரஸ் ரிப்போர்ட்'டைக் கொண்டு வந்து அப்பாவின் கையில் கொடுத்து, அதைப் பார்த்து விட்டுக் கையெழுத்துப் போட்டுத் தரச் சொன்னான்.

ராமு 'பிராகிரஸ் ரிப்போர்ட்'டைக் கையில் வாங்கிக் கொண்டதும் கூடத்துப் பக்கமாக அவன் தாயார் வந்தாள். அவள் அவன் வருவதைப் பார்த்து விட்டான். தன் பிள்ளையின் படிப்பு விஷயமாக அக்கறை எடுத்துக் கொண்டதாக அம்மாவின் எதிரில் காட்டுவதற்கு இதை விட நல்ல சந்தர்ப்பம் எங்கே வாய்க்கப் போகிறது?

"ஏண்டா வேணு, பள்ளிக் கூடத்தில் நீ என்ன செய்கிறாய்? அம்மா, உன் பேரன் படிக்கும் அழகைப் பார். இங்கிலீஷில் நூற்றுக்கு 23, தமிழில் 20, பூகோள சாஸ்திரம் 18, சரித்திரம் 17, டிராயிங் 99, கணக்கு! என்னடா, கணக்கு காலத்தில் ஒன்றும் போடவில்லையே! பூஜ்யம் வாங்கினாயா என்ன? 'சென்ற வருஷம் இந்த மாணவன் தவறுதலாக மேல் வகுப்புக்குப் பிரமோஷன் செய்யப்பட்டான் போலிருக்கிறது' என்று தலைமை ஆசிரியர் குறிப்பு வேறு எழுதியிருக்கிறாரே! என்னடா முழிக்கிறாய்? ஏன் சரியாகப் படிக்கவில்லை? உன்னை என்ன செய்கிறேன், பார்!" என்று கூறி நாடக மேடை ராஜா மாதிரி நற நற வென்று பல்லைக் கடித்தான்.

"ஏண்டாப்பா, ராமு! ஏன் அவ்வளவு ஆத்திரப்படுகிறாய்? அதென்ன அவ்வளவு மோசமான ரிப்போர்ட்டா?" என்று அம்மா சாந்தமாகக் கேட்டாள்.

அம்மா இப்படிக் கேட்டது ராமுவுக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது. "என்ன அம்மா, இது? இது மோசமான ரிப்போர்ட் இல்லை என்றால் பின்னே வேறு எதுதான் மோசமான ரிப்போர்ட்?" என்று கேட்டான்.

"இல்லை, அப்பா! இதை நல்ல ரிப்போர்ட் என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால் நீ படித்த காலத்தில் உன்னைப் பற்றி உபாத்தியாயர் அனுப்பிய ரிப்போர்ட்டுகளைப் போல் இது அவ்வளவு மோசமானதல்ல!"

தாயார் இப்படிச் சொன்னது ராமுவுக்குப் பிடிக்கவில்லை. கண்டித்துப் பேச நினைத்தான். ஆனால் அவன் அவளைப் பேசவிட வில்லை.

"பள்ளிக்கூடத்தில் பாடம் நடந்து கொண்டிருந்த போது இரண்டு மூன்று செந்தேள்களைப் பிடித்து வைத்துக் கொண்டு விளையாடினதற்காகப் பிரம்படி பட்டதை மறந்து விட்டாயா என்ன?" என்றாள்.

"நான் அடிபடவே இல்லை!" என்று ஆத்திரத்துடன் சொன்னான் ராமு.

"உபாத்தியாயர் நல்ல மார்க் தரவில்லையென்பதற்காக அவர்கள் வீட்டில் கவண் கல் வீசியதை மறந்து விட்டாயா?"

"இல்லவே இல்லை..." என்றான் ராமு.

"கணக்கு வாத்தியார் மேஜையின் மேல் அவரைப் போலக் கேலிச் சித்திரம் வரைந்து விட்டு நீ...!"

"...உதைபடவில்லை! இல்லவே இல்லை!"

"அதற்காக உன்னைப் பள்ளிக்கூடத்தை விட்டே டிஸ்மிஸ் செய்வதாயிருந்தார்களே? அது கூடவா மறந்து போய் விட்டது?"

"அதை மட்டும் நான் ஒப்புக் கொள்கிறேன்!" என்றான் ராமு, கொஞ்சம் நெகிழ்ந்த குரலில்.

"உன் பதினாலாம் வயதில் நண்பனும் நீயுமாக ரயில் பிரயாணம் செய்த போது, உனக்கும் அவனுக்கும் இரண்டு அரை டிக்கெட்டுகளுக்குப் பதிலாக ஒரு முழு டிக்கெட் வாங்கியிருப்பதாகச் சொல்லி உன் கணித மேதைக்காக அவரிடம் அடிபட்டாயே, அதற்கு என்ன சொல்கிறாய்?"

"சரிதான்! இன்னும் பாக்கியிருக்கிறதா?"

"தீபாவளியின் போது சம்பளத்திற்கென்று பணம் வாங்கிக் கொண்டு போய்ச் சீன வெடி வாங்கித் தீர்த்து விட்டாயல்லவா? புதிதாகப் புத்தகங்கள் வாங்க வேண்டும் என்று சொல்லிப் பணம் வாங்கிக் கொண்டு போய்க் காப்பி ஹோட்டல்களில் தொலைத்தாயல்லவா? இன்னொரு சமயம்......!"

"அம்மா, போதும், போதும்! அவைகளுக்கும் நான் இவனை அடிப்பதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?" என்றான் ராமு.

"நான் இனிமேல் ஒன்றும் சொல்லவில்லை. குழந்தையிடம் உன்னுடைய முரட்டுத் தனத்தைக் காண்பிக்காதே!" என்று சொல்லி விட்டு அம்மா உள்ளே போய் விட்டாள்.

* * *

அம்மா உள்ளே போனதும் ராமு வேணுவைத் திரும்பிப் பார்த்தான். இது வரையில் விம்மி வெடித்துக் கொண்டிருந்த வேணு, சிரித்த முகத்துடன் நின்றுகொண்டிருந்தான். ராமுவுக்கு அவனை ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

அப்பாவைப் பார்த்த வேணு, "அப்பா, நீ சின்ன வயசில் அவ்வளவு கெட்டிக்காரரா யிருந்தாய் என்று எனக்கு இதுவரையில் தெரியாதே! தேளை எப்படியப்பா பிடிக்கிறது? கவண் கல் எப்படி அப்பா வீசுகிறது? எனக்குச் சொல்லிக் கொடுக்கிறாயா, அப்பா! நான் இனி மேல் நன்றாய்ப் படிக்கிறேன். பாட்டி உன்னைப் பற்றிச் சொன்னாலும் அது எனக்கும் சொன்ன மாதிரிதான்!" என்றான்.

ராமுவின் முகத்தில் இப்பொழுது அசட்டுக் களை மறைந்து நல்ல களை பிறந்தது.

# குச்சுநாயும் குடியானவனும்



பட்டு

ஒரு கிராமத்தில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் ஒரு அருமையான குச்சுநாயை வளர்த்து வந்தான். தினம் அந்த நாய்க்குத் தான் சாப்பிடும் ஆகாரத்தில் கொஞ்சம் போட்டு மிகவும் அன்போடு வளர்த்து வந்தான்.

சில நாட்களுக்குப் பிறகு, அந்தக் குச்சு நாய் குட்டி போட்டது. குடியானவன் அந்தக் குட்டியை மிகவும் ஜாக்கிரதையாக வளர்த்து வந்தான். நாய்க்குட்டி நாளாக ஆக மிகவும் புத்திசாலியாகி வந்தது.

ஒரு நாள் நாய்க்குட்டி, தன் தாயிடம், "அம்மா, இப்படிச் சதா காலமும் வீட்டுக் குள்ளேயே அடைபட்டுக் கிடக்க எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. எங்கேயாவது வெளியிலே போய் உலாவி விட்டு வரலாம், வருகிறாயா?" என்று கேட்டது.

தாயும் சம்மதிக்கவே இரண்டுமாகச் சேர்ந்து வெளியே புறப்பட்டன.

இரண்டு மூன்று தெருக்களைத் தாண்டி இரண்டும் சென்று விட்டன. அப்பொழுது அவைகளுக்கு எதிரே ஒரு கார் வந்தது. காரைக் கண்டதும் நாய்கள் இரண்டும் ஒதுங்கி ஓரமாக ஓடின. நாய்களுக்கு அருகே வந்ததும் அந்தக் கார் 'டக்' கென்று நின்றது. நின்ற காரின் கதவு திறந்ததும் மிகவும் அழகான ஒரு பெண் கீழே இறங்கினாள்.

இரண்டு நாய்களும் அவளைக் கொஞ்சம் அதிசயத்துடன் பார்த்து நின்றன. அடுத்த விநாடியும் அந்தப் பெண் 'சரேல்' என்று அந்த நாய்க் குட்டியைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் காரில் ஏறிக் கொண்டாள். மறுவிநாடி கார் பறந்தது.

நாய்க்குட்டி தன் கீச்சுக் குரலில் வள் வள் என்று குரைத்துப் பார்த்தும் பலனில்லை. கார் அதற்குள் எத்தனையோ தெருக்களைத் தாண்டி விட்டது.

குட்டியைப் பிரிந்த பெரிய நாய் ஒன்றும் புரியாமல் தவியாய்த் தவித்தது. சாதாரணமாகக் குட்டி நாய் ஓடிப் போயிருந்தால் பெரிய நாய் அதை எப்படியும் கண்டு பிடித்துவிடும். குட்டி நாய் காரில் ஏறிக் கொண்டு அல்லவா போய்விட்டது! அதை எப்படிக் கண்டு பிடிக்க முடியும்? வெகு நேரம் அந்த இடத்திலேயே வருத்தத்துடன் இருந்து விட்டு, பெரிய நாய் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு தவித்தது.

வழியே போன ஒருவன் அந்த நாயின் பரிதாபமான நிலையைப் பார்த்து, அதைத் தன் ஊருக்கு அழைத்துச் சென்றான். பெரிய நாய்க்கு மனம் மிகவும் வெறுத்துப் போய் விட்டது. தன் குட்டியைப் பிரிந்த பின்பு தான் எங்கே போனால் என்ன என்ற தீர்மானத்துக்கு வந்து விட்டது. மேலும் தன் எஜமான் ஆசையோடு வளர்த்து வந்த நாய்க் குட்டியைப் பறி கொடுத்து விட்டு, அதற்கு வீட்டுக்குப் போகப் பிடிக்கவே இல்லை.

அந்த நாய் உயர்ந்த இனத்தைச் சேர்ந்த நாயாதலால் அதைப் பிடித்துக் கொண்டு போனவன் ஒரு சர்க்கஸ் கம்பெனிக்கு விற்று விட்டான். நொந்து போன தன் மனதை வேறு வழியில் திருப்புவதற்கு இதுவும் நல்ல வழிதான் என்று தீர்மானித்து நாய் அந்தச் சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்து உற்சாகமாக வேடிக்கைகளையெல்லாம் நன்றாகக் கற்றுக் கொண்டது.

நாயும் அதன் அழகிய குட்டியும் போன பின்பு, குடியானவனுக்கு எதிலும் மனம் வெறுத்துப் போய் விட்டது. கிராமம் முழுவதும் அலைந்து ஒரு சந்து பொந்துகூட விடாமல் தேடிப் பார்த்து விட்டான். நாயும் அதன் குட்டியும் எங்கேயும் கிடைக்கவில்லை.

நாய்க் குட்டியை ஒரு பெண் காரில் எடுத்துச் சென்றாள் அல்லவா? அந்த வீட்டில் நாய்க் குட்டியை அவர்கள் ரொம்ப ஆசையோடு அருமையாக வளர்த்து வந்தார்கள். ஆனால் நாய்க் குட்டிக்குச் சந்தோஷமே இல்லை. ரொட்டியும் பிஸ்கத்தும் பாலும் வெண்ணெயும் அதற்குக் கொஞ்சங் கூடப் பிடிக்கவில்லை.

"தினமும் சோப்பைப் போட்டுத் தேய்த்துக் குளிப்பாட்டி என்னை உபத்திரவப் படுத்துகிறார்களே, இது என்ன கஷ்டம்! ஆகா! கிராமத்தில் குடியானவன் வீட்டிலே எவ்வளவு நிம்மதியாகத் தாயாருடன் காலங் கழித்தேன்! மறுபடியும் அம்மாவுடன் அந்த எஜமான் வீட்டுக் கஞ்சியை எப்போது ஆனந்தமாகக் குடிக்கப் போகிறேன்!" என்று நினைத்து நாய்க் குட்டி கண்ணீர் விட்டது.



ஒரு நாள் அந்தப் பெண் அந்த ஊருக்குப் புதிதாக வந்திருந்த சர்க்கஸைப் பார்ப்பதற்குப் போனாள். போகும் போது நாய்க் குட்டியையும் அழைத்துச் சென்றாள்.

நாய்க்குட்டி நன்றாகக் கவனித்துச் சர்க்கஸைப் பார்த்து வந்தது. அப்பொழுது ஒரு காட்சியில் ஒரு நாய் ரொம்பப் பிரமாதமாக வேடிக்கைகளெல்லாம் செய்து காட்டியது. அந்த நாயைப் பார்த்ததும் குட்டி நாய்க்குத் தன் அம்மாவாக இருக்குமோ என்று சந்தேகம் உண்டாயிற்று. சற்றுக் கவனித்துப் பார்த்தது. அந்த நாய் இரண்டு கால்களால் நடந்து ஒரு போர் வீரனின் உடையுடன் பலவித வேடிக்கைகளைச் செய்தது; ஒரு மேஜையருகே உட்கார்ந்து பெரிய கம்பெனியின் மானேஜரைப் போலக் கம்பீரமாக டெலிபோனில் பேசியது; பிறகு சின்ன மோட்டாரில் ஏறி உட்கார்ந்துகொண்டு ஜோராக ஓட்டியது; போலீஸ்காரனாக இருந்து தெருவில் போகும் வண்டிகளுக்கெல்லாம் கையைக் காட்ட, வண்டிப் போக்குவரத்தை ஒழுங்காகக் கவனித்தது; அப்புறம் திருடன் வேஷத்துடன் வந்து நிஜத் திருடன் மாதிரியே நடித்தது.



நாய்க்குட்டிக்கு ஒன்றும் புரியவில்லை. கடைசிக் காட்சியில் நாய் சாதாரண நாயாக, வேஷம் போட்டுக் கொள்ளாமல் வந்து இன்னொரு நாயுடன் சண்டையிட்ட போதுதான் அந்த நாய் தன் தாய் என்று தெரிந்தது.

அடுத்த நிமிஷம் நாய்க் குட்டி தன் எஜமானியின் கைப்பிடியிலிருந்து சங்கிலியுடன் விடுவித்துக் கொண்டு தாயிடம் ஓடியது.

சர்க்கஸ் பார்க்க வந்தவர்களுக்கு மத்தியிலிருந்து ஒரு நாய்க்குட்டி வேகமாகப் பாய்ந்து ஓடி மேடையை அடைந்தது. தாயைக் கண்ட சந்தோஷத்தில் அது தன் வாலை வேகமாக ஆட்டிக்கொண்டு மேடையில் பெரிய நாயைச் சுற்றிச் சுற்றி வந்தது. அதைப் பார்த்ததும் சர்க்கஸ் பார்க்க வந்தவர்கள் கரகோஷம் செய்து தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்தனர்.

பெரிய நாய்க்குக் குட்டியைக் கண்டதும் சந்தோஷம் தாங்கவில்லை. அதற்கு ஆனந்தக் கண்ணீர் பெருகியது.

குடியானவனுடைய கிராமத்துக்குப் பக்கத்து ஊரில் தான் சர்க்கஸ் வந்திருந்தது. ஆகவே, குடியானவனும் சர்க்கஸ் பார்க்க வந்திருந்தான். தன் நாயைக் கண்டதும் குடியானவனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. பெரிய நாயும் அதன் குட்டியும் தங்கள் எஜமானனை நன்றாய் அடையாளம் கண்டு கொண்டன; தாங்களாகவே அவனிடம் பாய்ந்து ஓடிப் போய் வாலை ஆட்டிக் கொண்டு அவனிடமே நின்றன.

நாய் கிடைத்த சந்தோஷத்தில் குடியானவனுக்கு ஒன்றும் புரியவில்லை. நாயைப்பற்றியும் அதன் குட்டியைப் பற்றியும் குடியானவன் வரலாறு முழுவதும் சொல்லவே, சர்க்கஸ் கம்பெனிக்காரனுக்கு அவனிடம் இரக்கம் உண்டாகி விட்டது. ஆகையினால் நாயையும் குட்டியையும் அவனிடமே விட்டு விட்டான். குடியானவன் மிகவும் சந்தோஷத்தோடு நாயையும் அதன் குட்டியையும் அழைத்துக் கொண்டு தன் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

நாயும் அதன் குட்டியும் அவைகள் பிரிந்திருந்த காலத்தில் நடந்த சம்பவங்களையெல்லாம் சந்தோஷமாகக் கதை மாதிரி சொல்லிக் கொண்டே குடியானவனோடு அவன் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தன.



# பாக்கியசாலி

ராமப்பிரியா

வண்டி ஒரு சிறிய பங்களாவின் முன் நின்றது. அதிலிருந்து இறங்கினாள் ஒரு வயதான ஸ்திரீ. வண்டியை விட்டு இறங்கியதும் "இது தானே வக்கீல் ராமசாமி ஐயர் வீடு?" என்று வண்டிக்காரனைக் கேட்டாள். வண்டிக்காரன், "ஆமம்மா! இதுதான். நான் சாமான்களை எடுத்துக் கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சாமான்களை எடுத்துக் கொண்டு இறங்கியின், பின்னால் அந்த வீட்டுக்குள் சென்றாள். முன் பக்கத்து அறையில் கேஸ் கட்டுகளை ஆராய்ந்து கொண்டிருந்த அந்த வீட்டுச் சொந்தக்காரரான வக்கீல் ராமசாமி வண்டி வந்த சப்தத்தைக் கேட்டு யாரென்று எட்டிப் பார்த்தார். அந்த அம்மாளைப் பார்த்தவுடனே, "அத்தையா! வா! ஏது அபூர்வமாயிருக்கிறதே. நீ வரப் போவதாகக் கடிதம் எழுதினால் நான் ரயிலடிக்கு வந்து அழைத்து வந்திருப்பேனே!" என்றார்.

"என்னமோப்பா! உன்னையும் அந்தத் தாயில்லாக் குழந்தையையும் பார்க்க வேண்டும் போல் ஆசையாயிருந்தது. திடீரென்று கிளம்பி வந்துவிட்டேன். உன் மூத்த மனைவி இருந்த போது வந்ததுதானே! உனக்கு இரண்டாம் கல்யாணம் ஆன பிறகு நான் வரவேயில்லை. இவளுக்கும் பிள்ளை பிறந்திருக்கிறதென்று கேள்விப்பட்டேன்" என்று சளசளவென்று பேசிக் கொண்டே உள்ளே வந்தாள்.

"செல்லம், செல்லம்" என்று கூப்பிட்டார் ராமசாமி. "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டே நான்கு வயதுப் பெண்ணைக் கையில் பிடித்தவாறு வந்தாள் அவருடைய மனைவி செல்லம்.

"செல்லம்! இவள்தான் என் அத்தை. திருவையாற்றில் இருக்கிறாள். அத்தையைக் கவனித்துக் கொள்!" என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.

"வாருங்கள், அத்தை! உங்களை நான் பார்த்ததேயில்லை" என்று சொல்லிக் கொண்டே செல்லம் அத்தையை நமஸ்காரம் செய்தாள். "மகராஜியாய் அவளுடைய ஆயுளையும் போட்டுக் கொண்டு நீ நன்றாக இருக்க வேண்டும். ஏண்டியம்மா! இவள் தானே உன் மூத்தாள் குழந்தை சீதா! இவளுடைய தாயார் இருக்கும்போது பார்த்தது. ஏன் இப்படி நோஞ்சலா யிருக்கிறாள்? உன் குழந்தை எங்கே?" என்று சரமாரியாகக் கேள்விகள் கேட்டாள். செல்லத்தின் முகம் வாட்டமடைந்தது. அவள் கையைப் பிடித்துக் கொண்டிருந்த பெண் குழந்தையைப் பார்த்து, "சீதா! வாசலில் பாலு என்ன செய்கிறான், பார்" என்று சொல்லி அனுப்பி விட்டாள்.

குழந்தை வாசலில் போன பிறகு, "அத்தை! தயவு செய்து குழந்தை எதிரில் என் குழந்தை, மூத்தாள் குழந்தை யென்று பிரித்துப் பேசாதீர்கள். இன்று வரையில் பாவம், சீதா என்னைத் தன் தாயார் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறாள். பாலுவும் சீதாவும் என் குழந்தைகளே தான். குழந்தைக்கு மாற்றாந்தாய் என்ற வார்த்தையே தெரியக் கூடாதென்றே நான் பாடு படுகிறேன். மேலும் அவருடைய உத்தரவும் அதுதான். சீதாவுக்கு எட்டு மாதம் ஆகும் பொழுதே நான் அவளுடைய தாயார் ஸ்தானத்தை ஏற்றுக் கொண்டேன். ஆகையால் இனி மேல் அந்த மாதிரி சொல்லாதீர்கள்!" என்று உணர்ச்சி மேலிட்டுக் கூறி விட்டுச் சற்று நிறுத்தினாள். பிறகு, "என்னமோ பேசிக்கொண்டே யிருக்கிறேனே! நீங்கள் ஸ்நானம் செய்து விட்டு வாருங்கள்" என்று அத்தையைக் குளிக்கும் அறைக்கு அழைத்துச் சென்றாள்.

முகத்திலடித்தாற் போல, செல்லம் சொன்ன வார்த்தைகள் கிழவிக்குக் கோபத்தை உண்டாக்கியது. "அடேயப்பா! என்ன கரிசனம் மூத்தாள் குழந்தையினிடம்! இவளுக்கு மேல் மூத்தாள் குழந்தையினிடம் உயிரையே வைத்திருப்பதாகச் சாகசம் செய்யும் மாய்மாலக்காரிகளை நான் பார்த்திருக்கிறேன். பாவம்! ராமசாமி சாது! இவளுடைய மோகத்தில் இவள் வார்த்தைகளை நம்புகிறான். ராமசாமிக்கு மனசில் படும்படியாக

நாம் தான் சொல்ல வேண்டும்'' என்று தனக்குள் கறுவிக் கொண்டாள் ஜெமி.

★

ராமசாமி ஈரோடில் பிரபல வக்கீல். அவர் மனைவி ஜானகி, சீதாவைப் பெற்ற பிறகு உலகத்தில் தான் வந்த காரியம் ஆயிற்று என்பதைப் போல் அறையிலேயே பத்து நாளைக்குள் கண்ணை மூடி விட்டாள். அருமை மனைவியை இழந்த துக்கத்தில் ராமசாமி ரொம்பவும் துடித்துப் போனார். ஒரு நர்ஸை ஏற்பாடு செய்து குழந்தையை கண்ணை இமை காப்பது போல வளர்த்து வந்தார். தாய்ப் பால் இல்லாததால் குழந்தை ரொம்பவும் மெலிந்து இருந்தது. ராமசாமி மறுமணம் என்பதைக் கனவில் கூட நினைக்கவில்லை. வெறுக்கவே செய்தார் என்று சொல்லலாம். ஆனால் போகப் போகப் பொறுப்பான மனிதர் இல்லாமல் சின்னக் குழந்தையைப் பராமரிப்பதில் உள்ள கஷ்டத்தை உணரலானார். குழந்தை அடிக்கடி நோய்வாய்ப்பட்டு ராமசாமியை நிம்மதியில்லாமல் பண்ணியது.

ஒரு சமயம் அவர் கேசுக்காகப் பொன்னாச்சியில் தம்முடைய மாமாவின் வீட்டில் தங்கும்படி நேரிட்டது. ராமசாமி குழந்தை வளர்ப்பதில் தாம் படும் கஷ்டத்தையெல்லாம் தம்முடைய மாமாவிடத்தில் சாங்கோபாங்கமாகச் சொன்னார். இதைக் கேட்ட அவருடைய மாமா தம்முடைய குமாஸ்தா கிருஷ்ணமூர்த்திக்கே ஒரு பெண் இருப்பதாகவும் ரொம்பவும் நல்ல குணமுடையவளென்றும் பணவசதியின்மையால் கலியாணம் ஆகவில்லையென்றும் கூறினார். மேலும் அந்தப் பெண் செல்லத்தைக் கல்யாணம் செய்து கொண்டால் பிறகு குழந்தை பராமரிப்பைப் பற்றிய கவலையே வேண்டாமென்றும் ரொம்பவும் வற்புறுத்திக் கூறினார். ராமசாமி ரொம்ப நாள் யோசனை செய்து கடைசியில் செல்லத்தை இளையாளாகக் கலியாணம் செய்து கொண்டார். விவாகம் ஆனவுடனேயே செல்லத்தை ஈரோடிற்கு அழைத்து வந்து விட்டார். செல்லம் வீட்டிற்குள் வந்தவுடனேயே சீதாவை (எட்டு மாதக் குழந்தையை) அவளிடம் கொடுத்துவிட்டு, "செல்லம்! என் உயிரே சீதாதான். நோயாளிக் குழந்தையான அவளை உன் குழந்தை போலக் கவனிக்க வேண்டும். சீதாவுக்குத் தன் தாயார் இறந்து போனதோ நீ சிறிய தாயார் என்பதோ கொஞ்சமும் தெரியக் கூடாது. அதுதான் என் வேண்டுகோள்'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார். செல்லமும் "சரி'' என்பது போலத் தலையாட்டினாள்.

செல்லத்திற்குத் தன்னையறியாமலேயே சீதாவிடம் ஒரு பாசம் விழுந்து விட்டதால் அவளை ரொம்ப அன்போடு வளர்த்து வந்தாள். சீதாவும் "அம்மா, அம்மா'' வென்று செல்லத்தினிடம் உயிரையே வைத்திருந்தாள்.

மறு வருஷத்திலேயே செல்லத்துக்கு பாலு பிறந்தான். பாலு நல்ல திடகாத்திரமாக இருந்ததால் அவன் விஷயத்தில் செல்லம் ரொம்ப அக்கறை காட்டவில்லை. சீதா சுபாவத்திலேயே பலவீனமாயிருப்பதால் அவளைக் கவனமாய்ப் பார்த்து, வளர்த்து வந்தாள். ராமசாமியும் தமக்கு உண்மையான பொறுப்பு வாய்ந்த மனைவி அமைந்து விட்டதால் தலை நிமிர்ந்து நடக்கலானார். நான்கு வருஷங்கள் எவ்வித சலனமுமின்றிக் கழிந்தன. பார்ப்போர் யாவரும் செல்லத்துக்கே இரண்டு குழந்தைகள் என்று தான் எண்ணியிருந்தனர். இந்தச் சமயத்தில் தான் அத்தை வந்தாள்.

★

அத்தை அன்று மந்தியானம் தம்முடைய பெட்டியைத் திறந்து, அதிலிருந்து மைசூர்ப் பாகு வைத்திருக்கும் பாத்திரத்தை எடுத்து சீதாவிடத்தில் இரண்டு மைசூர்ப் பாகும் பாலுவினிடத்தில் இரண்டும் கொடுத்தாள். சீதா மிக ஆவலோடு அதைத் தின்னப் போகையில் செல்லம் ஓடோடியும் வந்து, அவள் கையிலிருக்கும் மைசூர்ப்பாகைப் பிடுங்கிக் கொண்டாள். பிறகு அத்தையைப் பார்த்து, "அத்தை! சீதாவுக்குக் கண்டதையெல்லாம் கொடுக்காதீர்கள்! அவளுடைய குடல் ரொம்பவும் பலவீனமானது. அவளுக்கு இதெல்லாம் கொஞ்சம் கூட ஜீரணம் ஆகாது'' என்றாள்.

"பாலு மட்டும் தின்னலாமோ? பாலு சீதாவுக்கும் சிறியவன்தானே?'' என்றாள் அத்தை.

"பாலு ஆரோக்கியமுள்ள குழந்தை. அவனுக்கு எதையும் எளிதில் ஜீரணித்துக் கொள்ளும் சக்தி உண்டு. ஆனால் சீதா சுபாவத்திலேயே பலவீனமாகையால் அவள் எதையாவது தின்றால் உடம்புக்கு ஆகாது!'' என்றாள்.

"பாலுவுக்கு எல்லாவற்றையும் முதலிலிருந்து கொடுத்துப் பழக்கியிருக்கிறாய். என்ன இருந்தாலும் சீதா மூத்தாள் குழந்தை தானே! ஒன்றையும் அவள் கண்ணில் காட்டாதிருந்து திடீரென்று கொடுத்தால், அது எப்படி உடம்புக்கு ஒத்துக்கொள்ளும்?'' என்றாள். வானம் இடிந்து தன் தலையில் விழுந்து விட்டது போலிருந்தது செல்லத்துக்கு. இது என்ன பேச்சு! அமைதியாய் இருந்த வீட்டில் அமர்க்களம் செய்யவா வந்திருக்கிறாள் இந்த அத்தை? செல்லத்துக்கு அழுகை அழுகையாய் வந்தது. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு செல்லம் அத்தையோடு அதிகம் பேச்சு வைத்துக் கொள்ளவில்லை. இரண்டு நாளைக்கெல்லாம் அத்தை ஊருக்குப் போனாள். ராமசாமி ரயிலேற்றுவதற்குக் கூடவே வண்டியில் போனார். "அப்பா ராமசாமி! நீயோ பரமசாது! உனக்கு வெளுத்ததெல்லாம் பால்! நீ யாரையும் சுலபத்தில் நம்பிவிடுகிறாய். தாயில்

லாக் குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்!" என்று பூடகமாக நீலிக் கண்ணீருடன் சொன்னாள் அத்தை. ராமசாமிக்குத் 'திக்'கென்றது. சமாளித்துக் கொண்டு, "ஏன் அத்தை, அப்படிச் சொல்கிறாய்? சீதாவுக்கு அம்மா இல்லையென்று யார் சொன்னா? செல்லம் பாலுவைவிடப் பன்மடங்கு அதிகப்படியாகவே பார்த்துக் கொள்ளும் பொழுது தாயில்லாக் குழந்தை என்று சொல்வதே பிசகு!" என்றார்.

"நீ எங்கே உள்ளே புகுந்து பார்க்கிறாய்? பாலுவுக்கு ஒரு நியாயமாகவும் சீதாவுக்கு ஒரு நியாயமாகவும்தான் எல்லாம் செய்கிறாள் செல்லம். நான் இந்த இரண்டு நாளும் கூட இருந்து பார்த்ததினால் சொல்கிறேன். மாற்றாந் தாய் என்றால் பின் எப்படியிருப்பாள்? சீதாவின் தலையெழுத்து பிறந்தவுடனேயே தாயை விழுங்கிவிட்டது. அவள் இருந்தால் இக் குழந்தை இப்படியா எலும்பும் தோலுமாயிருக்கும்? எனக்கு வயிற்றைக் கொதிக்கிறது. அடுத்தாற்போல பாலு நன்றாக இல்லையா?" என்று கூறி மூக்கைச் சிந்தி கண்ணைத் துடைத்துக் கொண்டாள். ராமசாமியின் முகம் பேயறைந்தாற் போலாகிவிட்டது. 'சரியான விஷ வித்தை ராமசாமியின் மனசில் ஊன்றிவிட்டோம்' என்ற திருப்தியோடு அத்தை ஊர் போய்ச் சேர்ந்தாள்.

★

ராமசாமி அதன் பிறகு ஒவ்வொரு சம்பவத்தையும் சந்தேகக் கண்களுடனேயே பார்க்கலானார். செல்லத்தின் வாழ்வில் துயரத்தின் நிழல் லேசாகப் படர ஆரம்பித்தது. அன்பின் சிகரமாகவும் கருணை வடிவாகவும் இருந்த ராமசாமி வர வர மூன் கோபியாக மாறிவருவது செல்லத்துக்குச் சொல்லொணாத் துயரத்தையே அளித்தது. ஒரு நாள் செல்லம் குழந்தைக ளிருவருக்கும் சாதம் போட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது ராமசாமியும் சாப்பிட உட்கார்ந்தார். "செல்லம்! அந்தக் கூடையில் மாம்பழம் இருக்கிறதே! அதை நறுக்கிப் போடு!" என்றார் ராமசாமி. "இப்பொழுது எதற்கு! பிறகு நறுக்கித் தருகிறேன்" என்றாள் செல்லம். "இப்பொழுது ஏன் கூடாதென்கிறாய்?" என்று சீறினார்.

"சீதா இரண்டு நாளாக இருமிக் கொண்டிருக்கிறாள். மாம்பழம் நறுக்கினால் தனக்கும் வேண்டுமென்று சொல்வாள். அவளுக்கு உடம்புக்கு ஆகாது. அதற்காகத்தான் பிறகு நறுக்கிக் கொள்ளலாம் என்கிறேன்" என்றாள்.

"சீதாவுக்கு ஒன்றும் செய்யாது. அவளுக்கும் போடு. எதை எடுத்தாலும் அவளுக்கு உடம்புக்காகாது என்று சொல்லிச் சொல்லித் தான் அவளை நரம்புமாதிரி வைத்திருக்கிறாயே! இனி இன்று முதல் பாலுவுக்குப் போடுவதெல்லாம் அவளுக்கும் போடு. உடம்புக்கு ஏதாவது வந்தால் நான் வைத்தியம் பார்க்கிறேன். என்னைவிட அதிக அக்கறை உனக்கு வேண்டாம்" என்று படபடப்பாகச் சொன்னார். செல்லம் அப்படியே திகைத்துப் போய் நின்றுவிட்டாள். அழுகை குமுறிக் கொண்டு வந்தது. சிரமப்பட்டு அழுகையை அடக்கிக் கொண்டு, "இனிமேல் உங்களிஷ்டப்படியே செய்கிறேன். குழந்தைகளுக்குள் வித்தியாசப்படுத்தி மட்டும் பேசாதீர்கள். அதை என்னால் தாங்கவே முடியாது" என்று கூறிவிட்டு, அவளை யறியாமல் அழுது விட்டாள். செல்லம் அழுவதைக் கண்ட சீதா எச்சிற் கையோடு செல்லத்தைக் கட்டிக் கொண்டு, "அம்மா! நீ ஏன் அம்மா அழறே! அப்பா கோவிச்சண்டானா! அப்பாவோடே நானும் பேசல்லே; நீயும் பேசாதே! அழாதே அம்மா! நீ அழுதால் நானும் அழுவேன்!" என்று மழலையில் கூறினாள்.

"போதும்! இரண்டு பேருமாகச் செய்யும் நீலித்தனம்!" என்று இரைந்துவிட்டு எழுந்துவிட்டார் ராமசாமி. யாருடைய துர்ப்போதனையால் இப்படி மாறிவிட்டார் என்பது விளங்காத புதிராகவே இருந்தது செல்லத்துக்கு. 'இத்தனை நாளாக இல்லாமல் இப்பொழுது திடீரென்று பாலுவுக்கு செய்வது போல் செய் என்கிறாரே. என் மனதார சீதாவின் மேலிருக்கும் அன்பிற்கு எந்தவிதத்திலும் மேலாக பாலுவை நான் நினைக்கவே இல்லையே! பகவானே! ஏன் இப்படிச் சோதிக்கிறாய்?' என்றெல்லாம் நினைத்தவாறே சுவாமி படத்திற்கு விளக்கேற்றி நமஸ்காரம் செய்யப் போனாள். அங்கு வேறோர் இடத்தில் சீதா சுவாமி படத்தை வணங்கியவாறே "சுவாமி! அம்மாவை அழச் சொல்லாதே! அம்மா நல்ல அம்மா,



சாஸ்திரிகள் மனைவி:—நன்றாயிருக்கிறது! நான் ஞாபகப் பிசகாகத் தட்சணை கொடுத்தேன். நீங்கபாட்டுக்கு வாங்கி இடுப்பிலே செருகிக் கொண்டு விட்டீர்களே! இது நம்ம வீட்டு நோம்பு அல்லவா? அதைக் கொடுங்கோ திருப்பி!

"அப்பாதான் கெட்டவர்" என்று கண்களில் நீருடன் சொல்லிக் கொண்டிருந்தாள்.

இரண்டு மூன்று நாட்களாகவே லேசாக இருமிக் கொண்டிருந்த சீதாவுக்கு வர வர அதிகமாகி வாய் ஓயாமல் இரும ஆரம்பித்தது. பிறகு அந்த இருமல் பாலுவுக்கும் பற்றிக் கொண்டது. முதலில் சாதாரண இருமல் என்று நினைத்தே டாக்டர் பார்த்துக் கொண்டிருந்தார். வர வர இரண்டு குழந்தைகளுக்கும் இருமல் அதிகமாகி இருமுவதும் வாந்தி யெடுப்பதுமாக ரொம்பச் சிரமப்பட்டார்கள். செல்லம் இரவும் பகலும் அன்ன ஆகாரமின்றி, தூக்கமின்றிக் குழந்தைகள் இருவரையும் பக்கத்தில் போட்டுக் கொண்டு கண்ணீர் வடித்தபடியே உட்கார்ந்திருந்தாள். டாக்டர் "இது கக்குவான் இருமல். நாற்பது நாளைக்கு அப்படித்தானிருக்கும். வெகு ஜாக்கிரதையாய்க் கவனிக்க வேண்டும்" என்று சொல்லி விட்டார். இந்த லக்ஷணத்தில் ராமசாமியும் செல்லத்துடன் சரியாகப் பேசவில்லை.

ஒருநாள் மத்தியானம் குழந்தைகள் இருவரும் சேர்ந்தாற் போல இரும ஆரம்பித்து, வரவர அதிகமாகி, இருமல் தாங்க முடியாமல் மூர்ச்சையடைந்து விட்டார்கள். செல்லத்திற்கு ரொம்பப் பயமாய்ப் போய் விட்டது. ராமசாமியும் கோர்ட்டுக்குப் போய்விட்டார். கோர்ட்டுக்கு ஒரு ஆளையும் டாக்டருக்கு ஒரு ஆளையும் அனுப்பி விட்டு எல்லாத் தெய்வங்களையும் வேண்டியவாறு உட்கார்ந்திருந்தாள் செல்லம்.

முதலில் டாக்டர் வந்தார். மூர்ச்சை தெளிய ஏதோ இன்ஜெக்ஷன் பண்ணிவிட்டுச் செல்லத்தை நோக்கி, "அம்மா! இந்த இருமலுக்குப் புதிதாக ஒரு மருந்து கண்டு பிடித்திருக்கிறார்கள். அது இப்போதுதான் உபயோகத்தில் வந்திருக்கிறது. அந்த மருந்தை இன்ஜெக்ஷன் செய்தால் உடனே அற்புதமான குணம் தெரியும். ஆனால்......" என்று இழுத்தாற்போலக் கூறினார். இந்தச் சமயத்தில் ராமசாமி வந்துவிட்டார். இப்போது எதையும் அவர் சந்தேகக் கண் கொண்டு பார்க்கிறதால், டாக்டரும் செல்லமும் என்ன பேசுகிறார்கள் என்று அறைக்கு வெளியே இருந்து ஒட்டுக் கேட்டார்.

"ஆனால் என்று ஏன் சொல்லுகிறீர்கள் டாக்டர்! அந்த மருந்தின் விலை அதிகமென்று யோசனை செய்கிறீர்களா? என்ன ஆனாலும் சரி. என் கண்மணிகள் பிழைத்தால் போதும். இப்போதே அந்தப் புதிய மருந்தை வாங்கி வந்து ஊசி குத்துங்கள். ஏன் தாமதம்?" என்று உணர்ச்சி வசப்பட்டு இரைந்து கூறினாள் செல்லம்.

"விலையைப் பற்றி யோசனையே யில்லை அம்மா! அந்த மருந்தை, சென்னைக்குப் போன ஒருவரிடம் சொல்லி வாங்கிவரச் சொன்னேன். அவர் தவறுதலாக ஒரு குழந்தைக்கு வேண்டிய மருந்தைத்தான் வாங்கி வந்திருக்கிறார். நான் மறுபடி அந்தக் கம்பெனிக்குத் தந்தி யடித்திருக்கிறேன். இன்னும் இரண்டு நாளில் வந்துவிடும். இப்போது கைவசமிருக்கும் மருந்தை எந்தக் குழந்தைக்குக் கொடுப்பதென்று தான் யோசனை செய்கிறேன். ஏனென்றால் இரண்டு குழந்தைகளின் நிலைமையும் ஒரே மாதிரிதானிருக்கிறது" என்றார் டாக்டர்.

என்ன பதில் சொல்லப் போகிறாளென்று காதைத் தீட்டிக் கொண்டிருந்தார் ராமசாமி. செல்லம் கொஞ்சங்கூட யோசனை பண்ணாமல், "டாக்டர்! அந்த மருந்தைச் சீதாவுக்கு உடனே இன்ஜெக்ஷன் பண்ணுங்கள். அவள் ஏற்கெனவே பலவீனமானவள். அவளுக்குத் தாங்கும் சக்தி கொஞ்சம் கூடக் கிடையாது. பாலு சீதாவைவிட ஆரோக்கியமுள்ளவன். அவனுக்குத் தாங்கிக் கொள்ளும் சக்தி உண்டு. நான் இத்தனை நாளாக என் குழந்தையை விட மேலாகப் பாவித்து வளர்த்ததை வியர்த்தமாக்கி விடாதீர்கள். என் சீதாவைப் பிழைக்க வையுங்கள் டாக்டர்!" என்று ஆவேசத்தோடு இறைஞ்சினாள்.

இதையெல்லாம் விடாமல் கேட்டுக்கொண்டிருந்த ராமசாமிக்கு வியர்த்து விட்டது. உத்தமியான மனைவியை, அத்தையின் பேச்சைக் கேட்டு, சந்தேகப்பட்டுக் கீழ்த்தரமாக நடந்து கொண்டு விட்டோமே யென்று உணர்ந்து வெட்கினார். எப்படி அந்தத் தெய்வ வடிவங் கொண்ட தாயைப் பார்ப்பது என்று கூசினார். ஆம், அந்தச் சமயத்தில் அவருக்குச் செல்லம், தாலி கட்டிய மனைவியாகத் தோன்றவில்லை. எனினும், மனசை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு ஒன்றுமே தெரியாதவர்போல உள்ளே வந்தார். டாக்டர் புதிய மருந்தைச் சீதாவுக்கு இன்ஜெக்ஷன் செய்து விட்டு வெளியே வந்து கொண்டிருந்தார். எதிரில் ராமசாமியைப் பார்த்ததும் "இனிமேல் சீதாவைப் பற்றிக் கவலையில்லை. பாலுவை மட்டும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

ராமசாமி செல்லத்தினருகே உட்கார்ந்து, "செல்லம்! அந்த அத்தையின் கலக வார்த்தையை நம்பி உன்னுடைய பவித்திரமான அன்பைச் சந்தேகித்தேனே! நான் மகாபாபி. சீதாவைப் பற்றி இனி கவலையில்லை. ஆனாலும் உன் தங்கமான மனசை பகவான் சோதிக்கவே மாட்டார். பாலுவும் கட்டாயம் பிழைத்துக் கொள்வான். இந்தச் சில நாட்களில் எப்படி உருத் தெரியாமல் நீ இளைத்துப் போய் விட்டாய்? உன்னை மனைவியாகப் பெற்ற நானும் தாயாகப் பெற்ற சீதாவும் பாலுவும் உண்மையிலேயே பாக்கியசாலிகள்!" என்று கண்களில் நீர் மல்கக் கூறினார் ராமசாமி.

"என் குழந்தைகள் கண்ணைத் திறந்து பார்த்து 'அம்மா'வென்று கூப்பிட்டால்தான் நான் பாக்கியசாலி!" என்றாள் அந்த மாற்றாந் தாயாகிய செல்லம்மாள்!


The DOT
BALL POINT PEN
FOR REAL WRITING PLEASURE
in six attractive colours
Rs. 3/15
கவர்ச்சிகரமானது. சிக்கனமானது.
நம்பகமானது. செய் நேர்த்திக்கு
உத்திரவாதம் கொண்டது. உஷ்
ணப் பிரதேசங்களுக்கு ஏற்றவாறு
சிகப்பு, நீல கலர்களில் இங்க்
ரீபில்கள் சுலபமாகக் கிடைக்கும்.
இன்றே வாங்குங்கள்.
"டாட்"
பேனக்களே மிகச் சிறந்தவை.
G.W.K. SYNDICATE LD.




அரசாங்கப் பெண்கள் உயர்நிலைப்பள்ளி அன்று வழக்கத்தைவிட மிகுந்த சுறுசுறுப்புடன் காணப்பட்டது. வகுப்பு அறைகளெல்லாம் வெள்ளையடிக்கப் பட்டுப் பளிச்சென்று விளங்கிக் கொண்டிருந்தன. மாணவிகள் வரைந்த பல வர்ணப் படங்கள் சுவரில் அழகாக மாட்டி வைக்கப் பட்டிருந்தன. பெரியார் பலருடைய பொன்மொழிகளைத் தாங்கிய அட்டைகள் அறைகளின் நாற்புறமும் தென்பட்டன. "டாண், டாண்" என்று முதல் மணி அடிக்கவே, சிறு சிறு கும்பலாகக் கூடிப் பேசிக் கொண்டிருந்த மாணவிகள் எல்லோரும் அவசரம் அவசரமாகத் தத்தம் வகுப்பிற்கு விரைந்தனர்.

இரண்டாவது மணி யடித்ததும் நான்காவது பாரத்தில் நுழைந்தாள் சரித்திர ஆசிரியை விஜயலக்ஷ்மி. கடவுள் வணக்கத்திற்காகச் சில விநாடிகள் மௌனமாக எழுந்து நின்ற மாணவிகள் அமைதியுடன் அமர்ந்து கொண்டனர். உடனே பாடம் ஆரம்பமாயிற்று. அலெக்ஸாண்டருடைய சரித்திரத்தை அற்புதமாக வர்ணித்து விட்டு, அவனுடைய இந்தியப் படை யெடுப்பைப் பற்றிக் கூறத் தொடங்கிய விஜயலக்ஷ்மி, கரும் பலகையின் மீது தொங்கிக் கொண்டிருந்த தேசப் படத்தினருகே சென்று நின்று கொண்டாள். கையிலிருந்த பென்சிலைக் கொண்டு, அலெக்ஸாண்டர் எந்த வழியாக இந்தியாவில் புகுந்து, எங்கெங்கே போரிட்டான் என்பதை மிகவும் சிரத்தையுடன் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் வகுப்பில் நுழைந்த இன்ஸ்பெக்டரை அவள் கவனிக்கவில்லை. "தயவுசெய்து உட்காரவும்" என்ற இன்ஸ்பெக்டரின் வார்த்தைகள் அவ்வறையில் நிலவிக் கொண்டிருந்த அமைதியைக் குலைத்தன. தேசப் படத்தின் மீதே கண்ணாக இருந்த லக்ஷ்மி திடுக்கிட்டுத் திரும்பினாள். நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்த இன்ஸ்பெக்டரையும், அவருக்கு மரியாதை செலுத்த நின்று கொண்டிருந்த மாணவிகளையும் கண்டு அவள் ஒரு கணம் திகைத்து விட்டாள். மறுகணம் முகத்தில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு இன்ஸ்பெக்டருக்கு வணக்கம் செய்தாள். பொறுப்புடனும் சிரத்தையுடனும் பாடத்தை நடத்திக் கொண்டிருந்த அந்த இளம் ஆசிரியையை இன்ஸ்பெக்டர் ராகவன் ஒரு கணம் உற்று நோக்கினான். அழகும், அமைதியும் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்த அவள் மதி முகத்தைக் கண்டு அவன் பிரமித்து விட்டான். அவனுடைய கண்களின் அம்பினிருந்து சிரமத்துடன் தன் கண்களை விடுவித்துக் கொண்ட லக்ஷ்மி தன்னைச் சமாளித்துக் கொண்டு மீண்டும் பாடத்தைத் தொடங்கினாள். ஒரு நிமிஷத்தில் நடந்து முடிந்த சம்பவத்தை மேஜையருகே நின்று கொண்டிருந்த தலைமை ஆசிரியையோ வகுப்பிலிருந்த மற்ற மாணவிகளோ கவனிக்க வில்லை.

மணி அடித்த பின் ஆசிரியர்கள் அறையை நோக்கிச் சென்று கொண்டிருந்த விஜயலக்ஷ்மி அந்த இளம் இன்ஸ்பெக்டரின் உருவத்தைத் தன் அகக் கண் முன்னிருந்து அகற்ற அரும்பாடு பட்டாள். ஆனால் எவ்வளவு பாடுபட்டு என்ன! கண்டது தோல்வியைத்தான்.

மற்ற ஆசிரியைகளெல்லாம் இன்ஸ்பெக்டர் எப்பொழுது பள்ளியை விட்டுச் செல்வார் என்று ஏங்கிக் கொண்டிருந்தபோது லக்ஷ்மிக்கு மட்டும் இன்னும் இரண்டு நாள் அவர் இன்ஸ்பெக்ஷன் நடத்திக் கொண்டிருக்கக் கூடாதா என்று தோன்றியது. ராகவன் ஆமை வேகத்தில் ஒவ்வொரு வகுப்பையும் பரிசீலித்ததிலிருந்து அவனுக்கும் அந்தப் பள்ளிக்கூடத்தை விட்டு இலேசில் போக மனம் வரவில்லை என்பதும் தெரிந்தது.

★

இதற்குப் பின் ஒரு மாதம் சென்றிருக்கும். காலை ஒன்பது மணி சுமாருக்கு அந்தச் சிறு அறையில் தனியே வசித்து வந்த விஜயலக்ஷ்மி வேலை எல்லாம் முடிந்தபின் புத்தகம் ஒன்றைப் பிரித்து வைத்துக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தாள். அறையில் ஒரே புழுக்கமாக இருந்தது. கதவைத் திறந்து வைத்தாவது கொஞ்சம் காற்று வராதா என்று எண்ணி ஜன்னல் கதவைத் திறந்தாள். கதவைத் திறந்ததும் அவளுடைய பார்வை எதிர் வீட்டுத் திண்ணையில் நின்று கொண்டிருந்த மனிதனின் மேல் விழுந்தது. அவ்வளவுதான், தன் கண்களை மீட்கும் சக்தியற்று அப்படியே நின்று விட்டாள். சுவாரஸ்யமாகப் பத்திரிகையில் ஈடுபட்டிருந்த ராகவனும் யதேச்சையாகத் தலையை நிமிர்த்தி எதிரே நோக்கினான். எதிர்பாராமல் லக்ஷ்மியை அங்கே கண்டதும் திகைப்பு மேலிட்டால் அவனுடைய கண்களும் அகல விரிந்தன. அப்பொழுது லக்ஷ்மிக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. இன்ஸ்பெக்டரான அவனுக்கு வணக்கம் செலுத்த வேண்டியது ஆசிரியையான லக்ஷ்மியின் கடமையல்லவா!

'அவருக்கு என்னை ஞாபகமிருக்கிறதோ இல்லையோ! எத்தனையோ ஆசிரியைகளை அவர் பள்

ளிக்கூடங்களில் பார்த்திருப்பார். என்னை அவர் அடையாளம் கண்டு கொள்ளா விட்டால்! முன் பின் தெரியாத ஒருத்தி நமக்கு வணக்கம் தெரிவிக்கிறாளே என்று அவர் ஏதாவது வித்தியாசமாக நினைத்துக் கொண்டு விட்டால்!''

இந்த இக்கட்டான நிலைமையில் குழம்பித் தவித்த அவளைக் காப்பாற்றத்தானோ என்னமோ, கடவுள் ராகவனின் தாயாரான பாகீரதியம்மாளை அங்கே அனுப்பி வைத்திருக்க வேண்டும். தன் தாயாரின் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டுத் திரும்பினான் ராகவன். அதே சமயம் வேகமாகக் கதவைச் சாத்திய லக்ஷ்மியின் விரல்கள் கதவுகளிரண்டின் இடையே அகப்பட்டு நசுங்கிவிட்டன. 'வீர்'சென்று கதறிய லக்ஷ்மி ரத்தம் ஒழுக அங்கேயே உட்கார்ந்து விட்டாள். இந்தக் கூச்சலைக் கேட்டதும் பதறி அடித்துக் கொண்டு எதிர் வீட்டிற்கு ஓடினாள் பாகீரதியம்மாள். வீட்டினுள் ஓடிய ராகவனும் முதலுதவிப் பெட்டியை எடுத்துக் கொண்டு லக்ஷ்மியின் சிகிச்சைக்காகப் பறந்தான்.

"அடியம்மாடி! எப்படியம்மா விரலை நசுக்கிக் கொண்டாய்! இவ்வளவு ரத்தம் வடிக்கிறதே! அடே ராகவா! ஓடிவாடா சீக்கிரம்" என்று பாகீரதி பதட்டத்துடன் கூக்குரலிட்டாள்.

"இதோ வந்துவிட்டேன் அம்மா!" என்று பதிலளித்தவாறு உள்ளே பாய்ந்துவந்த ராகவன் பெட்டியைத் திறந்து டிஞ்சரையும், பஞ்சையும் எடுத்து துணியினால் ஒரு சிறு கட்டுக் கட்டினான். அன்று அவனுடைய தாயார் அங்கேயே தங்கி நெடுநேரம் வரை லக்ஷ்மியுடன் பேசிக் கொண்டிருந்து சென்றாள்.




இந்தச் சம்பவத்திற்குப் பின் ராகவனுடைய குடும்பத்திற்கு லக்ஷ்மி மிகவும் வேண்டியவளாகி விட்டாள். தன் தாயாருடன் வெளியூரில் வசித்துவந்த ராகவன் மதுரைக்கு ஜாகை மாற்றி இரண்டே தினங்கள் தானாகி யிருந்தன. முப்பதாவது வயதை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் மணம் செய்துகொள்ள ஏனோ அவனுக்கு மனம் வரவில்லை. ஆனால் அன்று பள்ளிக்கூடத்தில் விஜயலக்ஷ்மியைக் கண்டபின் அவன் மனம் மணத்தைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கிவிட்டது.

ஒருநாள் பாகீரதி அம்மாள் பேச்சுவாக்கில், "ஏன், லக்ஷ்மி! இங்கே தனியாக இருக்கிறாயே, உனக்குத் துணையாக யாரையாவது அழைத்து வைத்துக் கொண்டால் என்ன!" என்றாள்.

லக்ஷ்மி வறண்ட சிரிப்புடன் "மாமி, எனக்குத் துணையாக இங்கே யார் வரப் போகிறார்கள்!" என்றாள்.

"ஒரு கல்யாணத்தைச் செய்து கொண்டால் துணை தானாகக் கிடைக்கிறது!" என்று கேலியுடன் கூறிய பாகீரதி அம்மாள் ஆவலுடன், "லக்ஷ்மி! நீ ஏன் இன்னும் மணம் செய்து கொள்ளாமலிருக்கிறாய்!" என்று கேட்டாள்.

"அபாக்கியவதியான என்னை யார் மாமி, கல்யாணம் செய்து கொள்வார்கள்!" என்று கேட்ட லக்ஷ்மியின் கண்கள் கலங்கின.

"அடி பைத்தியமே! உன் அழகிற்கும், படிப்பிற்கும் 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டல்லவா வருவார்கள்! இதோ பார்......" என்றாள் பாகீரதி அம்மாள்.

ஆனால் நடுவில் லக்ஷ்மி குறுக்கிட்டு, "நான் கல்யாணம் செய்து கொண்டு வாழக் கொடுத்து வைக்காதவள், மாமி! கடவுள் என் தலையில் என்றும் கன்னியாகவே வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று விதித்திருக்கும்போது நாம் என்ன செய்ய முடியும்!" என்று மிகுந்த விரக்தியுடன் பதிலளித்தாள்.

"லக்ஷ்மி, நீ சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. உன் இந்த விரக்திக்குக் காரணம் என்ன!" என்று வியப்புடன் வினவினாள் பாகீரதி.

சற்று நேரம் மௌனமாக இருந்த லக்ஷ்மி தன் துயரக் கதையைச் சொல்லத் தொடங்கினாள்.

★

"தாயற்ற குழந்தையாகத் தந்தையுடன் வளர்ந்து வந்த நான் என் பதினேழாவது வயதில் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து முடித்தேன். என் தந்தை எனக்கு வரன் தேடும் முயற்சியில் ஈடுபட்டார். சாதாரணக் குடும்பத்துப் பெண்ணான என்னைச் சொற்ப வரதக்ஷிணை வாங்கிக் கொண்டு மணக்க ஒருவரும் முன்வரவில்லை. கடைசியில் யாரோ ஒரு செல்வந்தருடைய பிள்ளை. வரதக்ஷிணை வாங்காமல் என்னை மணக்க முன் வந்தார். என்னுடைய சௌந்தரியச் செல்வம் ஒன்றே போதும் என்று சொல்லி விட்டாராம் அவர். நல்ல அந்தஸ்துள்ள, கௌரவமான குடும்பத்தில் ஏக புத்திரனாக விளங்கிய அவரை அடைவதற்கு நான் பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்று கூறிப் பெருமைப்பட்டுக் கொண்டார் என் அப்பா.

"அந்த வெள்ளிக்கிழமை நிச்சயதார்த்த விழா மிகவும் சிறப்பாக நடந்தேறியது. பட்டாடை உடுத்திய பல பெரிய மனிதர்கள் அதற்கு வந்திருக்

தார்கள். எங்கள் வீட்டெதிரே நின்ற மோட்டார் கார்களைக் கண்டு எங்களுக்குப் பெருமை தாங்க வில்லை. அதிர்ஷ்டசாலி என்று என்னைப் பலரும் புகழ்ந்தார்கள். 'லக்ஷ்மி இனிமேல் நம்மை யெல்லாம் கவனிக்க மாட்டாளடி. அவள் பெரிய இடத்து நாட்டுப் பெண்ணாகிவிட்டாள்' என்று கேலி செய்தனர் என் தோழிகள். இந்தச் சந்தோஷம் இரண்டு நாட்கள்கூட நீடிக்கவில்லை. நிச்சயதார்த்தத்தை முடித்துக் கொண்டு வீட்டிற்குச் சென்ற மாப்பிள்ளையின் தந்தை அன்று இரவு மார்பு வலி என்று படுத்தவர் மறுநாள் மரண மடைந்து விட்டார். அத்துடன் என் கல்யாணமும் நின்றுவிட்டது. அவருடைய மரணத்திற்கு நான்தான் காரணம் என்பது அவர்களுடைய நம்பிக்கை. ஊரார் இதை மனப்பூர்வமாக ஆமோதித்து என் துர்க்கிரகத்தைப் பற்றிப் பறைசாற்ற ஆரம்பித்தார்கள். ஆகவே, மணமாகுமுன்பே மாப்பிள்ளையின் தந்தையைக் கொன்ற என்னை மணக்க எவரும் முன் வரவில்லை. என் திருமணம் நின்று விட்டதே என்ற பெரும் கவலையில் என் தந்தையும் வெகு சீக்கிரம் என்னை விட்டுப் பிரிந்தார். அவர் வைத்துச் சென்ற சிறு நிதியைக் கொண்டு பி. ஏ. தேறி ஆசிரியையாகக் காலம் கடத்துகிறேன்."

அப்பொழுது லக்ஷ்மியின் அழகான கண்களில் நீர்த் துளிகள் வழிந்தோடிக் கொண்டிருந்தன. சிறிது நேரம் இரக்கம் பெருகும் கண்களுடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான் பாரேந்தியம்மாள். பிறகு, "லக்ஷ்மி! மூட நம்பிக்கையால் மனிதர்கள் மதியை இழந்து விடுகின்றனர். ஒரு பாவமுமறியாத உனக்கு அவர்கள் மகத்தான தீங்கிழைத்துவிட்டார்கள். கவலைப்படாதே, லக்ஷ்மி! எனக்கு அதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. என் மகன் ராகவனை நீ மணந்து கொள்வதாயிருந்தால் சொல்லு. அவனுக்கு உன்னை மணப்பதில் பூரண சம்மதம்" என்றாள்.

திடீரென்று தன்மேல் வந்து மோதிய இன்ப அலைகளின் அதிர்ச்சியைத் தாங்க முடியாத லக்ஷ்மி ஆச்சரியத்தினால் அகல விரிந்த கண்களுடன் அவளையே உற்றுப் பார்க்கலானாள்.

"என்ன, பேசாமலிருக்கிறாய்!" என்று பாரேந்தி மீண்டும் கேட்கவே சுய உணர்வைப் பெற்ற அவள் வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள்.

★

கல்யாணத்திற்கு நாள் குறித்தாகிவிட்டது. நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. இன்னும் இரண்டே நாட்களில் ராகவன் தன் கழுத்தில் மணமாலையை சூட்டப் போகிறான் என்பதை நினைக்க நினைக்க லக்ஷ்மியின் உள்ளத்தில் இன்பம் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கியது.

அன்று இரவு எட்டு மணி இருக்கும். 'தட தட' வென்று வாயிற் கதவு தட்டப்படுவதைக் கேட்டு ஓடிச் சென்று கதவைத் திறந்தாள் லக்ஷ்மி.

"அம்மா! எதிர் வீட்டு துரை மோட்டார் சைக்கிளிலிருந்து கீழே விழுந்துவிட்டாராம். பலமான காயம் ஏற்பட்டிருக்கிறதாம். எல்லோரும் ஆஸ்பத்திரிக்கு ஓடுகிறார்கள்" என்றும் செய்தியைக் கூறிவிட்டு அவள் வீட்டு வேலைக்காரப் பையன் பரக்கப் பரக்க ஓடிவிட்டான்.

இதைக் கேட்ட லக்ஷ்மி இடிந்து போய்ச் சற்று நேரம் வரை அங்கேயே நின்றுவிட்டாள். ஒருவாறு

தன்னைத் திடப்படுத்திக் கொண்டு வீட்டைப் பூட்டிவிட்டுத் தெருவில் இறங்கினாள். எதிரே வந்த வண்டியில் ஏறி உட்கார்ந்த அவள் "சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு ஓட்டப்பா வண்டியை!" என்று உத்தரவிட்டாள். அவள் மூளை அப்பொழுது தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்தது. 'அன்று விச்சயார்த்தம் செய்துவிட்டுச் சென்ற அந்த மனிதர் திடீரென்று மார்புவலியால் மரணமடைந்தார். இன்றோ, நாளை என்னை இரண்டு நாட்களில் மணக்கப்போகிற ராகவன் விபத்துக்குள்ளாகி ஆஸ்பத்திரியி லிருக்கிறார். இதற்கெல்லாம் யார் காரணம்! ஆம், நான்தான் இதற்குக் காரணம். என்னைப் பனமாகப் பற்றிக் கொண்டிருக்கும் துர்க்கிரகம்தான் இதற்குக் காரணம். என் அருமை ராகவன் உயிருடன் வாழ வேண்டும். அவருடைய வாழ்க்கை ஊற்றில் நான் நஞ்சைக் கலந்து அதைப் பாழாக்கக் கூடாது' என்று தம்முள் நிர்மாணித்துக் கொண்டாள். வண்டி ஆஸ்பத்திரியை அடைவதற்குள்ளாக அவள் மனம் மாறியது. தன் துரதிர்ஷ்டத்தின் சாயை யார் மீதும் விழ வேண்டாம் என்று எண்ணிய அவள் மனம் மாறி வண்டியை ஸ்டேஷனுக்கு ஓட்டச் சொன்னாள். வண்டி ஸ்டேஷனை நோக்கிப் போய்க் கொண்டிருந்ததே ஒழிய அவள் மனம் ஆஸ்பத்திரியில் கிடந்த ராகவனைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.



நாடக முதலாளி:—நீர் இந்த நாடகத்தில் வரும் காதல் கட்டங்களில் நடிக்கும்போது கதா நாயகியை இணையற்ற ரூபவதியாகக் கற்பனை செய்து கொண்டு நடிக்கவேண்டும். ஞாபகம் இருக்கட்டும்.

நடிகர்:—அது சரி, அப்படியே நாடகம் நடந்தால் சில தினங்களுக்குள் நாடகத்தை நிறைய ஜனங்கள் பார்ப்பதாகக் கற்பனை செய்து கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடப் போகிறது!

யாருக்கும் சொல்லாமல் கோயமுத்தூருக்குப் புறப்பட்டு விட்டாள். அங்கே வசித்து வந்த அவளுடைய சிநேகிதியின் உதவியினால் அவள் ஆசிரியையாக இருந்த பள்ளிக்கூடத்தில் சரித்திர ஆசிரியையாக வேலையை ஏற்றுக் கொண்டாள்.

★

இரண்டு மாதங்கள் கழிந்தன. அன்று காலை பள்ளிக்கூடத்திற்குப் போவதற்குத் தயார் செய்து கொண்டிருந்த லக்ஷ்மி யாரோ வீட்டினுள் நுழையும் ஓசையைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். ராகவனும், பாரதியம்மாளும் வந்து கொண்டிருந்ததைப் பார்த்த அவளுக்கு அவர்கள் எப்படி அங்கு வந்தார்கள் என்று புரியவில்லை. பேச்சு வாக்கில் தன் சிநேகிதி ஒருத்தி கோயம்புத்தூரி லிருப்பதாக ஒரு நாள் அவள் பாரதியிடம் கூறியிருந்தாள். அதைக் கொண்டு அவளுடைய விலாசத்தைக் கண்டு பிடித்து அங்கு வந்திருந்தார்கள் அவ்விருவரும். பாரதி ஓடி வந்து லக்ஷ்மியை அணைத்துக் கொண்டாள். லக்ஷ்மியினால் பேசவே முடியவில்லை. துக்கம் அவளுடைய தொண்டையை அடைத்துக் கொண்டது. "ஏன் லக்ஷ்மி, என்னிடமும் சொல்லாமல் புறப்பட்டு வந்து விட்டாய்! ராகவன் என்னவானான் என்பதை அறியக் கூட உனக்கு விருப்ப மில்லாமல் போய் விட்டதா!" என்று வினவினாள் பாரதி.

கண்களில் பெருக்கெடுத்தோடிய நீரைத் துடைத்துக் கொண்ட லக்ஷ்மி, "மாமி! என்னுடைய துரதிர்ஷ்டத்தினால்தான் அவருக்கு விபத்து ஏற்பட்டது என்று நான் திடமான முடிவுக்கு வந்தேன். நான் அவரை மணந்து கொண்டால் அவருடைய உயிருக்கே ஆபத்து வந்து விடும் என்று அஞ்சியே இங்கே புறப்பட்டு வந்தேன். நான் வாழப் பிறக்காதவள். என் விதியினால் மற்றவர்கள் துன்பப்படுவதை நான் விரும்பவில்லை" என்று விம்மலுக்கிடையே கூறினாள்.

அது வரைக்கும் பேசாமல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த ராகவன், "லக்ஷ்மி! இல்லாததை எல்லாம் கற்பனை செய்து கொண்டு வீணாக ஏன் மனத்தை அலட்டிக் கொள்கிறாய்! நான் விபத்திற்குள்ளானதற்குக் காரணம் நீதான் என்று நினைக்கிறாய். ஆனால் அதற்குக் காரணம் உன் துர்க்கிரகமல்ல, என்னுடைய பிசகுதான்" என்றான். அதைக் கேட்ட லக்ஷ்மி அவனை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"இந்த இன்ஸ்பெக்டர் உத்தியோகம் வேண்டாம் என்று எண்ணி ஒரு பெரிய கம்பெனிக்கு உத்தியோகத்திற்காக மனுச் செய்திருந்தேன். அன்று அங்கே நேரில் போய்க் கேட்டதில் அதன் முதலாளி என்னை அடுத்த வாரம் வேலையை ஏற்றுக் கொள்ளுமாறு சொன்னார். சம்பளம் 450 ரூபாய். இந்தச் சந்தோஷச் செய்தியை உன்னிடம் கூறத்தான் வேகமாக வந்து கொண்டிருந்தேன். எதிரே வந்த லாரியை நான் கவனிக்கவில்லை. அதனால் விபத்துக்குள்ளானேன். இதற்குக் காரணம் 'நான்தான்' என்று நீ சொன்னால் அதை இப்பொழுது யார் ஒப்புக்கொள்ளப் போகிறார்கள்! அடுத்த ரயிலில் நாம் மதுரைக்குப் புறப்பட்டாக வேண்டும். தெரிந்ததா, லக்ஷ்மி!" என்று மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனான் ராகவன்.

லக்ஷ்மி மறுமொழி ஒன்றும் கூறவில்லை. துன்பம் கவிந்திருந்த அவளுடைய இருதய அரங்கில் இன்ப உதயம் ஏற்படவே கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தோடிக் கொண்டிருந்தது.

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன்

## செய்தீர்களா?



உங்கள் பற்களையும், ஈறுகளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக் கொண்டு காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதில் சொரசொரப்பான பொருள் ஏதுமில்லை. மிருதுவாகவே உங்கள் பற்களை பளபளப்பான வெண்ணிறம் உண்டாகும்படி சுத்தம் செய்யும். வாயில் ஊறும் அபாயகரமான புளிப்பு நீர்களைக் கரைத்து பல்சொத்தை பிடிப்பதைத் தடுக்கும்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மிகச் சுத்தமானது. உபயோகிப்பதற்கு ஆனந்தமாயிருக்கும். அதனால் தான் உலகெங்குமுள்ள கோடிக்கணக்கான மக்கள் தினமும் இருதடவை தங்கள் பற்களை மக்ளீன்ஸினால் துலக்குகிறார்கள்.

...நான் எந்தப் பற்பசை உபயோகிக்கிறேன் என்று இந்த வாரத்தில் என்னிடம் ஐந்து பேர் வந்து கேட்டார்கள். ஏனெனில் என் பற்கள் அத்தனை வெண்மையாயிருக்கின்றன.....

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




MTY-5 TAM.

வியாபார விவரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன்,ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.



# போர் முனையில் சோதனை

பரிசுக் கதை

ஆசிரியர் : அஹரன் அமீர் (இஸ்ரேல்) : : மொழிபெயர்ப்பு : வாஞ்சி

"உன் சகாக்களிடம் சொல்லி விடாதே. இது மிகவும் இரகசியமான தகவல்" என்று ஆரம்பித்தார் தளபதி.

ஹரூன் மிகுந்த அக்கறையுடன் அவர் சொல்வதைக் கேட்க முற்பட்டான். அவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

பாலஸ்தீனப் போர்முனையில் இருந்த இராணுவத்தில் ஹரூன் ஒரு சிறிய அதிகாரி. எனவே அவனுக்குத் தான் ஒரு பெரிய இரகசியத்தை அறிந்து கொள்ளப் போகிறோம் என்ற ஆர்வம் ஒருபுறம்; மற்ற எல்லோரையும் விட்டு விட்டுத் தளபதி தன்னிடம் அந்த இரகசியத்தைக் கூற முற்பட்டதைக் குறித்து மகிழ்ச்சி ஒரு புறம்.

"இது உன் சகாக்களுக்கோ, சிப்பாய்களுக்கோ தெரியவே கூடாது. இன்னும் இரண்டொரு நாளில் சமாதானம் ஏற்படப் போவது நிச்சயம். எனினும் அதற்குமுன் நம்மிடையே மகத்தான சேதத்தை உண்டாக்கி விடவேண்டும் என்பது பகைவர்களின் எண்ணம். எனவே, இன்றிரவு நடுநிசிக்கு அவர்கள் கோரமான பெரும் படையெடுப்பை ஆரம்பிக்கப் போகிறார்கள். உன் டிவிஷன் சிப்பாய்கள் தூங்காமல் விழிப்புடன் இருக்கும்படி பார்த்துக் கொள்" என்று கட்டளையிட்டார் தளபதி.

"அப்படியே செய்கிறேன்" என்று ஹரூன் பணிவுடன் பதில் அளித்தான்.

"பகைவர்கள் இன்றிரவு தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்து விடத் தீர்மானித்திருக்கிறார்களாம். அவர்கள் திடீரென்று தாக்கப் போவதால், நாம் ஏமாந்து விடும் பட்சத்தில் நம்மிடையே அபரிமிதமான சேதம் ஏற்பட்டு விடும். ஜாக்கிரதை! மற்ற டிவிஷன்களையும் ஜரூராக இருக்கும்படி உத்தர விட்டிருக்கிறேன். எனினும் இன்றிரவு பன்னிரண்டு மணிக்குப் பகைவர்கள் பெரும் படையெடுப்பில் ஈடுபடப் போவதையோ, இரண்டொரு நாளில் சமாதானம் ஏற்படப் போவதையோ யாரிடமும் சொல்லவில்லை" என்று முடித்தார் தளபதி.

அத்தகைய இராணுவ இரகசியத்தைத் தளபதி தன்னிடம் மாத்திரம் கூறியதைக் குறித்து ஹரூன் பெருமிதம் அடைந்தான்.

** ** **

சமாதானம் ஏற்படப் போவதாக இதற்கு முன் பல தடவை வதந்திகள் கிளம்பியது உண்டு. எனினும் உத்தியோக தோரணையில் அறிவிக்கப்படும் வரையில் அத்தகைய வதந்திகளை நம்புவது பேராபத்தாக முடியும் என்று தளபதி கட்டளையிட்டிருந்தார். எனவே இரவில் போர் நடந்தாலும் நடக்காவிட்டாலும் சிப்பாய்கள் எந்த விநாடியிலும் போர் செய்வதற்குத் தயாராக இருந்தனர்.

இரண்டொரு நாளில் சமாதானம் ஏற்படப் போகிறது என்ற விஷயம் எப்படியோ சிப்பாய்களிடையே பரவியிருந்தது. அது



"என்ன ஸார், நேற்றைக்கு என்னுடைய கச்சேரிக்கு வந்திருந்தீர்களோ?"

"இல்லை, ஸார்! கச்சேரிக்குத் தான் புறப்பட்டேன்...! எதிர்பாராத விதமாக வேறே ஒரு சங்கடத்திலே அகப்பட்டுக் கொண்டேன்!"

உண்மையா என்பதைத் தெரிந்துகொள்ளாம லேயே சிப்பாய்கள் குதூகலமாகவும் கொம் மாளம் அடித்துக் கொண்டும் இருந்தனர்.

இதைக் கண்டு ஹாருன் உள்ளூற அவர்களை ஏளனம் செய்தான். "இவர்களில் எவ்வளவு பேர் நாளைக் காலையில் உயிருடன் இருக்கப் போகிறார்களோ? இந்த உண்மை தெரிந் தால் இவர்கள் இவ்வளவு குதூகலமாக இருக்க மாட்டார்கள்" என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டான்.

சில மணி நேரத்தில் பலியாகப் போகும் அவர்கள்மீது அவனுக்கு மிகுந்த அனு தாபம் உண்டாயிற்று.

"சிறுவர்களையும் கல்யாணமாகாத பிரம் மச்சாரிகளையும்தான் இராணுவத்தில் சேர்க்க வேண்டும் என்று சட்டம் விதித்தால் எவ் வளவு நன்றாக இருக்கும்? நாம் போரில் உயிரை விட்டாலும் விடாவிட்டாலும், தினசரி மனைவியையும் குழந்தைகளையும் நினைத்துக் கொண்டு பிராணனை விடுகிறோம்" என்றான் அப்போது ஒரு சிப்பாய்.

அதைக் கேட்டு மற்றவர்கள் சிரித்தனர்.

இரவு மிகவும் அமைதியாக இருந்தது. அன்று ஒரு பீரங்கிச் சப்தமோ, ஒரு துப் பாக்கிச் சப்தமோ கேட்கவில்லை. இந்த அமைதி ஹாருனுக்கு மிகவும் பயங்கரமாகத் தோன்றியது. அந்த அமைதி மறுநாள் அந்த இடத்தில் நிலவப் போகும் மரண அமை தியை குறிப்பிப்பதாக அவன் எண்ணினான். இருந்தாலும் அத்தனை பேருக்கும் தெரியாத ஒரு பயங்கர இரகசியத்தை ஹாருன் அறிந்திருந்ததில் அவனுக்கு ஒருவித ஆனந்தம் உண்டாயிற்று என்றே சொல்ல வேண்டும்!

வானத்தில் கருமேகங்கள் சஞ் சாரம் செய்து கொண் டிருந்தன. ஜெருசலம் குன்றுகளில் உள்ள வீடு கள் வானோங்கி நின்றன. இவை யெல்லாம் நடுநிசிக்கு ஏற்படப் போகும் பயங்கரமான படை யெடுப் பைப் பார்ப்பதற்காகத் துடித்துக் கொண் டிருப்பது போல் ஹாருனுக் குத் தோன்றியது.

'ஆஹா! ஜெருசலம், ஜெருசலம்!' என்று முறை முணுத்தான் அவன்.

அவன் மனத்திரையில் ஜெருசலத் தின் சரித்திரக் காட்சிகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன.

புழுதியும் பாழான கட்டிடங்களும் நிறைந்த இந்தப் பழைய ஜெருசலத் துக்காக எவ்வளவு போராட்டம்! இந்த ஜெருசலத்துக்காக எத்தனை ஆயிரக்கணக்கானவர் உயிரைப் பலி கொடுத்துள்ளனர்! இன்னும் எத் தனை எத்தனை ஆயிரம் பேர் உயி ரைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறார்கள்! ஜெருசலம் என்ற



பெயரைக் கேட்டதுமே எத்தனை பேருக்கு ஹிருதயத்தில் உணர்ச்சி பொங்குகிறது! கண் களில் நீர் சுரக்கின்றது! ஆஹா! சரித்திரம் மறக்கமுடியாத எத்தனை சம்பவங்கள் புனித ஜெருசலம் நகரில் நிகழ்ந்திருக்கின்றன!

ஹாருனுக்கு அன்றிரவு ஒரு நிமிஷம் ஒரு யுகமாகத் தோன்றியது. நடுநிசிக்குப் பகை வர்கள் படையெடுக்கும் வரையில் ஏன் காத் திருக்க வேண்டும்? அதோ சிறிது தூரத்தில் உள்ள ரஸ்தாவில் பகைவர்களின் இராணுவ லாரிகள் போகும் சப்தம் கேட்கிறது. நமது பீரங்கித் துருப்புகள் அந்தப் பக்கத்தைக் குறிவைத்துச் சுடும்படி அதிகாரிகள் உடனே ஏன் கட்டளை பிறப்பிக்கக் கூடாது?

அவ்வாறு கட்டளை பிறப்பிப்பது அனர்த்த மாக முடியும். இப்போது வெடி மருந்தை யெல்லாம் வீணாக்கி விடக்கூடாது. நடு நிசிக்கு ஏற்படப் போகும் பெரும் படை யெடுப்பைச் சமாளிப்பதற்கு வேண்டும் அல்லவா? எதிரிகள் இத்தகைய படை யெடுப்புக்காக எவ்வளவு காலமாக முன் னேற்பாடு செய்து வந்திருக்கிறார்களோ?

இப்போது எங்கும் அமைதியும் நிசப்தமும் நிலவுகின்றன. ஆனால் பன்னிரண்டு மணிக் குப் பின் எங்கும் குழப்பமாக இருக்கும். இடி முழக்கத்தைக் காட்டிலும் கோர மான பீரங்கிச் சப்தம் காதைச் செவிடாக்கி விடும். அப்போது போர் முனையிலிருந்து வெகு தூரத்தில் உள்ள எத்தெந்தக் குடும் பத்தினர் தங்கள் தங்களுடைய தந்தைமார்,



கணவன்மார், சகோதரர்கள், உறவினர்கள் முதலியோரை நொடிப் பொழுதில் இழந்து தவிக்கப் போகின்றனரோ?

**   **   **

ஹாருனின் சிந்தனைகள் கலைந்தன. நேரம் நடுநிசியை நெருங்கிக் கொண்டிருந்தது. கெடியாரம் அடித்துக் கொள்வதுபோல் ஹாருனின் நெஞ்சம் இடைவிடாமல் அடித்துக் கொள்ளத் தொடங்கியது.

ஒவ்வொரு நிமிஷமாக ஓடி, இறுதியில் பன்னிரண்டு மணி அடித்தது. ஹாருன் ஜுரமாக இருந்தான். போர் இன்றுள்ள அமைதியான இரவில் ஹாருன் மாத்திரம் பதறிக் கொண்டு அங்குமிங்கும் சென்று கண்காணிப்பதைப் பார்த்த சில சிப்பாய்கள் உள்ளூற நகைத்தனர்.

கடைசியாக இரவு அமைதியாகவே கழிந்தது. ஹாருனின் மனத்தில்தான் பயங்கரமான போர் நிகழ்ந்ததேயன்றி, பகைவர்களின் படையெடுப்பு எதுவும் ஏற்படவில்லை!

போர் நடந்து அதில் மடிவதாக இருந்தால்கூட ஹாருன் லட்சியம் செய்திருக்க மாட்டான். ஆனால் மேற்படி ஏமாற்றம் அவன் மனத்தில் சகிக்க முடியாத வேதனையை உண்டாக்கி விட்டது.

காலையில் ஹாருன் ஆகாரம்கூடச் சாப்பிடாமல் நேராகத் தளபதியின் முகாமுக்குச் சென்றான். அவனைக் கண்டதும் தளபதி முகாம் முழுதும் அதிரும்படியாகச் சிரித்தார்.

"இரவு ஏற்பட்ட பெரும் படையெடுப்பை மிகத் திறமையுடன் சமாளித்து விட்டாய் போலிருக்கிறதே!" என்றார் குத்தலாக.

அவ்வளவுதான்! ஏற்கெனவே கொந்தளித்துக் கொண்டிருந்த ஹாருனின் மனத்தில் ஆத்திரம் பொங்கியது. இரவில் பகைவர்கள் படையெடுக்கப் போவதாகத் தளபதி புரளி செய்து தன்னை ஏமாற்றியதோடு நில்லாமல், தன்னை ஏளனமும் செய்தது அவன் ஹிருதயத்தில் துவேஷத் தீயை மூட்டியது.

அவன் அந்த இடத்தை விட்டுத் திரும்பினான். 'ஹாருன், ஹாருன்' என்று தளபதி கூப்பிட்டும் கூடக் காதில் விழாததுபோல் வேகமாகச் சென்று விட்டான்.

அவன் மனத்தில் பொங்கிய ஆத்திரம் நாழிகை ஆக ஆகப் பெரும் ஜ்வாலையாகி அவன் தேகம் முழுவதையும் தகித்தது. தன்னை ஏமாற்றி, எள்ளி நகையாடிய தளபதியை அன்றிரவே சுட்டுக் கொன்றுவிடுவது என்று உறுதியாக முடிவு செய்தான்.

அன்றிரவு மணி பத்து இருக்கும். தளபதியின் முகாமுக்கு அருகில் ஹாருன் கைத்துப்பாக்கியுடன் ஒளிந்து கொண்டிருந்தான். இராணுவ முகாம்களில் சந்தடி அடங்கியதும் அவரைச் சுட்டுக் கொன்று விடவேண்டும் என்பது அவனது திட்டம்.

திடீரென்று தளபதியின் முகாமுக்குள் பேச்சுக் குரல் கேட்டது. இராணுவ உயர்தர அதிகாரிகளில் ஒருவரும் தளபதியும் பேசுகிறார்கள் என்பதை ஹாருன் தெரிந்து கொண்டான். அவர்களுடைய பேச்சில் தன் பெயர் அடிபடுவதைக் கேட்டதும் ஹாருனுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. தன்னைப் பற்றி அவர்கள் பேசுவதற்கு என்ன இருக்கிறது?

அவர்களிடையே நடந்த விவாதத்தைக் கேட்கக் கேட்க ஹாருனுக்குத் தானும் கூடாரங்களும் ஆகாயமும் நட்சத்திரங்களும் சுழல்வதுபோல் தோன்றின.

"உயர்தர இராணுவ அதிகாரிகளாக நியமிப்பதற்குத் தாங்கள் கொடுத்துள்ள ஜாப்தாவில் கண்டுள்ள பெயர்களில் இரண்டு மூன்று பேரைத் தான் நான் அங்கீகரிக்க முடியும். இந்த ஜாப்தாவில் நீங்கள் ஹாருனைச் சேர்க்காதது ஆச்சரியமாக இருக்கிறது. நமது இராணுவத்தில் உயர்தர அதிகாரி பதவியை வகிப்பதற்குத் தகுதியுடையவன் யாராவது இருக்கிறான் என்றால் அது ஹாருனைத் தவிர வேறு யாருமில்லை. ஹாருன் முதல்தர வீரன். எல்லாச் சோதனைகளிலும் தேறியவன். நேற்றிரவு கூட நடுநிசிக்குப் பகைவர்கள் பெரும் படையெடுப்பை ஆரம்பிக்கப் போவதாகக் கூறி அவனைச் சோதித்தேன். அந்தப் படை யெடுப்பில் தான் மீள்வது சந்தேகம் என்பது தெரிந்தும்கூட

ஹாருன் போர்முனையை விட்டு அகலவில்லை. இதற்குமுன் இத்தகைய சோதனை செய்து பார்த்தபோது, அதாவது நடுசிசியில் பெரும் படையெடுப்பு நடைபெறப் போவதாகக் கூறியபோது, அதைக் கேட்ட அதிகாரிகளில் பலர் தங்கள் உயிருக்குப் பயந்து போர் முனையை விட்டு ஒருவருக்கும் தெரியாமல் ஓடி மறைந்தது உங்களுக்குத் தெரியாதா? ஆகையால் உயர்தர இராணுவ அதிகாரிகள் நியமன ஜாப்தாவில் ஹாருனின் பெயர்தான் முதலில் இருக்க வேண்டும்......''

ஹாருன் அதற்குமேல் அவ்விடத்தில் நிற்கவில்லை. தன் முகாமுக்கு விரைந்து சென்றான். தன்மீது அன்பும் மதிப்பும் வைத்துள்ள தளபதியைப் பற்றி, தான் தவறாக நினைத்து மதிப்பிழந்து செய்யத் தகாத காரியத்தைச் செய்ய எண்ணியதற்காக வெகுநேரம் மனம் நொந்து உருகினான்.

திடீரென்று பெருமூச்சு விட்டு எழுந்தான் ஹாருன். அவன் மனம் ஒரு முடிவுக்கு வந்து விட்டது. இனி அந்த முடிவை யாராலும் மாற்ற முடியாது.

நடு நிசிக்கு முகாம்களில் ஒன்றிலிருந்து துப்பாக்கி வேட்டுக் கேட்டது. உடனே எல்லோரும் பதறிக்கொண்டு அங்கு ஓடினர். மறுபடியும் போர் மூண்டு விட்டதாகவே பலர் கருதினர்.

ஆனால் ஹாருன் தன் முகாமில் இரத்த வெள்ளத்தில் இறந்து கிடந்தான். அவனது கை, துப்பாக்கியை இறுகப் பற்றிக்கொண்டிருந்தது. அவனது மற்றொரு கையில் இருந்த கடிதத்தை ஓர் அதிகாரி எடுத்துத் தளபதியிடம் கொடுத்தார்.

''கனம் தளபதி அவர்களுக்கு,

இன்று காலை தாங்கள் என்னைக் கூப்பிட்டபோது நான் காது கேட்காததுபோல் அலட்சியமாகச் சென்றேன். இராணுவச் சட்டப்படி இது பெரும் குற்றம். சிறிது நேரத்துக்கு முன் தங்களைக் கொல்வதற்காக மறைந்து கொண்டிருந்தேன். இது மன்னிக்க முடியாத குற்றம். நல்லவேளையாக அத்தகைய பாதகமான காரியம் நடைபெறாமல் ஆண்டவன் தடுத்துவிட்டார். எனினும் மேற்படி குற்றங்களைச் செய்த எனக்கு என்ன தண்டனையோ அதை நானே என் கையினால் நிறைவேற்றிக் கொண்டு விட்டேன். என்னைத் தாங்கள் மன்னித்து விடுவீர்கள் என்று நம்புகிறேன். நான் தங்களுடைய மன்னிப்பைப் பெற்றால்தான் ஆண்டவனின் மன்னிப்பைப் பெற முடியும்.

தங்கள் ஊழியன்,

ஹாருன்''

தளபதியின் கண்களில் நீர் ததும்பியது. ''சமாதானம் ஏற்படப் போகும் இந்தச் சந்தோஷமான சமயத்தில் நாம் ஒரு சிறந்த வீரனை இழந்துவிட்டோம்'' என்றார் தளபதி.



''பாருடா, இந்த அப்பா, அம்மா படுத்துகிற பாட்டை! நமக்குத் தூக்கம் வராத போது நம்மை மிரட்டி உருட்டித் தூங்கப் பண்ணுகிறார்கள். நன்றாக அசந்து தூங்குகிற போது நம்மைப் புரட்டி, உருட்டி எழுப்பி விட்டு விடுகிறார்கள்.''

## 1. ராஜாவா, ராணியா?

அந்தக் காட்சியை உணர்ச்சி நிறைந்த கவிஞனோ, உண்மையான சைத்திரிகனோ, அல்லது பாரபக்ஷமின்றி உலகத்தில் எல்லாவற்றையும் கண்டு ரசிக்கும் உயர்ந்த ரசிகனோதான் கண்டு உணர முடியும்; ரசிக்க முடியும்.

நடுநிசி. வானில் மிதக்கும் முழுமதி வையத்தை மோக வாரிதிக் குள்ளாக்கி இருந்தது. நீண்ட நேரான மண் ரஸ்தா. அதற்கு இரு மருங்கிலும் வரிசையாகப் பலவித மரங்கள், அப்பாலுள்ள பசுமை நிறைந்த வயல் வெளிக்குப் பாதுகாப்பாய் நிற்பது போல! பசுங் கதிரைத் தாங்கி நிற்கும் வயல்களுக்கிடையே சிறு மைதானம் போன்ற ஒரு இடம். அதைக் கதிரடிக்கும் களத்து மேடு என்று கூடச் சொல்லலாம். அங்குதான் அந்த நாடோடிகளின் சிறு குடிசைகள் இருந்தன.

ஒன்றை ஒன்று நெருங்கினாற் போல் பத்துப் பன்னிரண்டு குடிசைகள் இருக்கும். எல்லாம் ஓலைப் பாயினால் அமைக்கப்பட்டிருந்தன. ஆண், பெண், குழந்தைகள் உள்படச் சுமார் நூறு பேர்களுக்கு மேலிருக்கும். அந்த நாடோடிக் குழுவினர்களுக்கு அந்தப் பத்துப் பன்னிரண்டு சிறிய குடிசைகளே போதுமானதாக இருந்தது. பெயரளவிற்கு அந்தக் குடிசைகள் இருந்தனவே தவிர எல்லோருக்கும் திறந்த வெளியில் வசிப்பதில்தான் அதிக மோகம் என்பது அவர்கள் இருந்த நிலையிலேயே நன்கு விளங்கும். அவர்களுக்கு நிரந்தரமாக வசிக்கக் கூடிய ஊரோ இடமோ கிடையாது. இன்று இந்த ஊர்; நாளை எந்த ஊரோ! இன்று இந்த இடம்; நாளை எந்த இடமோ! ஆனால் எந்த ஊர் சென்றாலும் அது அவர்கள் சொந்த ஊர்தான். எந்த இடமாயிருந்தாலும் அது அவர்கள் சொந்த இடம் போலத்தான். ஒவ்வொரு ஊரில் ஒரு மாதம் இரண்டு மாதம் தங்குவார்கள். ஒவ்வொரு ஊரில் ஒரு நாள் இரண்டு நாள்தான் தங்குவார்கள். எவ்வளவு சாமான்களும், அசௌகரியங்களும் இருந்தாலும் நினைத்தவுடனே ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குப் பிரயாணம் செய்யத் தயங்க மாட்டார்கள். அதுதான் அவர்களுக்கே உரித்தான சாமர்த்தியம்.

ஒவ்வொரு குடிசைக்கு எதிரேயும் ஒவ்வொரு அடுப்பு எரிந்து கொண்டிருந்தது. பகல் முழுவதும் ஊரைச் சுற்றிவிட்டு அப்பொழுதுதான் சமைக்கத் தொடங்கினர். ஒவ்வொரு குடிசைக்கு எதிரேயும் ஐந்தாறு பேர்கள் சிறு சிறு குழுவாகப் பிரிந்து அமர்ந்திருந்தனர். வயோதிகர்கள், இளைஞர்கள், குழந்தைகள் எல்லோரும் கலப்படமாக உட்கார்ந்திருந்தனர். இரண்டு மூன்று காளை மாடுகள், ஐந்தாறு ஆடுகள், சில கழுதைகள், நாய்கள் இவைகளெல்லாம் அவர்களுடைய ஆஸ்திகள். அவர்களைப் போலவே ஸ்திரவாசமில்லாமல் உலகம் சுற்றும் நாடோடிகள். அவர்கள் எப்படித் தாங்கள் உயிர்வாழ வேண்டுமென்று விரும்பினார்களோ, அப்படியே தங்களுக்காக உழைத்து உயிரைவிடச் சித்தமாய் இருக்கும் அந்தப் பிராணிகளின் உயிரையும் பெரிதாகக் கருதி அன்புடனும் பரிவுடனும் காப்பாற்றி வந்தனர்.

ஒரு நாய் ஒரு குடிசை வாசலிலிருந்து எதையோ வாயில் கவ்விக் கொண்டு ஓடியது. அதைத் துரத்திக் கொண்டு ஓடியது இன்னொரு நாய். இதைப் பார்த்த மற்ற நாய்களும் சும்மாயில்லை. கொஞ்ச நேரத்திற்குள் எல்லாமாகச் சேர்ந்து ரகளை செய்ய ஆரம்பித்தன. இதைப் பார்த்த ஒரு வாலிபன் ஓடி வந்து அவைகளை நயமாகவும் பயமாகவும் சமாதானம் செய்து வைக்க முயற்சித்தான்.

நாய்களின் கலாட்டாவை லட்சியம் செய்யாமல் ஒரு வாலிபன் ஒரு பெண்ணுக்கு அன்று, தான் புதிதாகத் தெரிந்து கொண்டு வந்த பாட்டு ஒன்றைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். இன்னொரு வாலிபன் அதற்குத் தகுந்தாற்போல் ஆர்மோனியம் வாசித்துக் கொண்டிருந்தான். இன்னொரு வாலிபன் தாளம் போட்டு அதை ரசித்துக் கொண்டிருந்தான்.

எங்கிருந்தோ ஒரு பெண்ணின் வெண்கல மணி ஓசை போன்ற சிரிப்பொலி கேட்டது. அதைத் தொடர்ந்து ஒரு வாலிபனும் கல கல வென்று சிரித்தான். ஒரு கிழவி வேறு குழுவினரோடு போய்க்கலந்திருக்கும் தன் பேரனைச் சாப்பிடுவதற்காக உரத்த குரலில் கூப்பிட்டாள். இளம் வயதுள்ள ஆண்களும் பெண்களும் ஜோடி ஜோடியாக அமர்ந்து அந்த நிலவொளியில் மெய் மறந்து பேசிக் கொண்டிருந்தனர். வாழ்க்கை விதி எப்படி அமைந்திருந்தால் என்ன! காதலும் துவந்துவமும் இந்த நாடோடிகளை மாத்திரம் விட்டுவிடுமா!

அவர்கள் நாடோடிகள்தான். ஆனால் பிச்சைக்காரர்கள் அல்ல. திருடர்களும் அல்ல. உண்மையாக உடலால் உழைத்துப் பிழைப்பவர்கள். ஆண்களில் அநேகர் கழைக் கூத்தாடிகள், பாம்பாட்டிகள், மகுடி வித்தை காண்பிப்பவர்கள், பச்சிலை மூலிகை மருந்து விற்பவர்கள். பெண்களும் அப்படியே. சிலர் கூடை பாய் முதலியவைகள் செய்து விற்பார்கள். சிலர் ஆண்களுக்கு உதவியாக இருந்து உழைப்பார்கள். தினம் ஒரு ரூபாய் அவர்களுடைய ஜீவனத்துக்குச் சரியாக இருக்கும்.

பாட்டும், கூத்தும், சிரிப்பும், காதலும் அன்று இரவு அந்த நிலவொளியில் அந்த நாடோடிகளிடையே ஒன்று கலந்து உறவாடின. பகலெல்லாம் ஊர் சுற்றி உழைத்த சிரமத்தை மறந்து அவர்கள் மெய் மறந்த இன்ப நிலையிலிருந்தனர். ஆனால் ஒருத்தி மாத்திரம் அந்தக் கூட்டத்தினரை விட்டு விலகித் தனித்துப் போய் அமர்ந்திருக்





தான். அவளுடைய முகத்தில் சோர்வும் துயரமும் நிரம்பி யிருந்தன. அவளுடைய கண்களில் சோக மும் பயமும் பரவியிருந்தன.

அவர்களெல்லாம் அவளுடைய சொந்த மனிதர் கள்தான். அவளும் அவர்களைப் போன்ற ஒரு நாடோடியின் வயிற்றில் பிறந்தவள்தான். ஆனால் அப்பொழுது அவளுக்கு அவர்களெல்லாம் தன் னைச் சேர்ந்தவர்கள்தான் என்று எண்ணும் உணர்ச்சியே ஏற்படவில்லை. அப்படி நினைக்கவே அவளுக்கு வெறுப்பாய் இருந்தது. இதற்குக் காரணம் அவள் அந்த நாடோடி வாழ்வைவிட வேறு சிறந்த வாழ்க்கை உலகத்திலிருக்கிறது என்று எண்ணியதுதான். அவள் சில வருட காலம் ஒரு பெரிய மனிதர் வீட்டில் வேலைக்காரியாக அமர்ந்திருந்தாள். அவள் பத்து வயதுச் சிறுமி யாக இருக்கும்போது அவளுடைய தகப்பன் அவளை ஒரு பெரிய மனிதர் வீட்டில் வேலைக்கு அமர்த்தி விட்டு வட நாட்டைச் சேர்ந்த ஒரு பைராகியுடன் போய்விட்டான். அவன் மறுபடி யும் திரும்பவேயில்லை. அவள் சில வருடகாலம் அந்தப் பெரிய மனிதர் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்தாள். அங்கு அவளுக்கு எவ்விதக் குறையுமில்லை. ஆனால் விதி அவளை அப்படியே விட்டு வைக்கவில்லை. அகன்ற மார்பும், திரண்ட புஜமும், முறுக்கிய மீசையும், இனிய பேச்சும், அன்புப் பார்வையும் கொண்ட நாடோடியான மல்லயன் அவள் மதியை மயக்கி விட்டான். ஒரு இரவு தன் எஜமானருக்குத் தெரியாமல் மல்லய்யனோடு கிளம்பி விட்டாள் வள்ளி.

வருடங்கள் ஓடிவிட்டன. வள்ளி மல்லய்ய னுக்கு வாழ்க்கைப்பட்டு மனைவியாகி இந்த நாடோடி வாழ்வில் எவ்வளவு இன்பம் உண்டோ அவ்வளவையும் கண்டு விட்டாள். மல்லய்யனும் திடீரென்று ஒரு நாள் அவளை அனாதையாக விட்டு விட்டு இறந்து விட்டான். இந்தப் பெரிய துயரத்திற்குப் பிறகு அவளுக்கு நாடோடி வாழ்க்கையில் கசப்பேற்பட் டிருந் தால் அதில் ஆச்சரியமென்ன! அந்த நாடோ டிகளிடையே அவள் ஒதுக்கப்பட்ட ஜீவன் போலத்தான் வாழ்ந்து வந்தாள். இந்தச் சம யத்தில் அவள் சிறு வயதில் குன்னத்தூர் பட் டக்காரர் வீட்டில் வேலைக்காரியாக அமர்ந்திருந்த வருடங்கள் சந்தோஷம் நிரம்பியவைகளாகத் தோன்றியதில் அதிசயமென்ன! அவள் மறுபடி யும் அந்த வீட்டிற்கே சென்று வேலைக்கு அமர லாம். நல்ல மனிதராகிய பட்டக்காரர் அவளை மன்னித்து வேலைக்கு வைத்துக்கொள்வார். ஆனால் அவளால் அந்த நாடோடி கூட்டத்ினரை விட் டுப் பிரிந்து செல்ல முடியுமா! அது முடியாது. அவள் அப்பொழுது பூரண கர்ப்பிணி. அவள் வயிற்றிலிருக்கும் குழந்தை மல்லய்யனுடையது. அவளை வேண்டுமானால் அந்த நாடோடிகள் விட்டு விடலாம். ஆனால் அவள் வயிற்றிலிருக்கும் குழந் தையை விட்டுவிட அவர்கள் தயாராயில்லை.

வள்ளியின் கணவன் மல்லய்யன் அந்தக் கூட் டத்திலேயே மிகவும் பலசாலியாகவும், புத்திசாலித் தனமும், சாமர்த்தியமும் நிரம்பியவனாகவும் இருந் தான். அவனை இழந்ததை அந்தக் கூட்டத்தி னரே தங்களுக்கு ஏற்பட்ட பெரிய துரதிர்ஷ்ட மாகக் கருதினர். அவன் அவர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கி வந்தான். எல்லோரும் அவ னைத் தங்களுக்கு அரசனாகத்தான் மதித்து வந் தனர். அவனை 'ராஜா' என்று எல்லோரும் அழைத்து வந்தனர். அவனுடைய குலமும் குடும்ப மும் ராஜ மரியாதைகளோடு போற்றப்பட்டன. அந்த நாடோடி ராஜா இறந்த பிறகு அவனுடைய பெருமையை நீடி நிறுத்தப் பிறக்கப்போகும் குலச் செல்வத்தை விட்டு விடுவார்களா! வள்ளிக் குப் பிறக்கப்போகும் குழந்தைதான் ராஜ குலத் தின் வாரிசு. அவளுக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆணாக இருந்தால் அது அவர்களுடைய இளவரசன். பெண்ணாகப் பிறந்தால் இளவரசி.

வள்ளிக்கு இதெல்லாம் ஒரு புறம் வெறுப்பாக வும் ஒரு புறம் சிரிப்பாகவும் இருந்தது. இந்த




நாடோடிகளின் வாழ்க்கையும் அவர்களுடைய வட் டங்களும்! ஆணாகப் பிறந்தால் ராஜாவாம். பெண்ணாகப் பிறந்தால் ராணியாம். வசிப்பதற்கு நிரந்தரமான இடமும், நாகரிகமும், வாழ்க்கை வசதிகளும் இல்லாத இவர்களுக்கு ராஜாவும் ராணியும் எதற்கு! அவள் வயிற்றில் பிறக்கப் போகும் குழந்தை ராஜாவாக இருந்தால் என்ன, ராணியாய் இருந்தால் என்ன! இதனால் அவளுக்கு ஏதேனும் பெருமை உண்டா! அந்தக் குழந்தை தான் மணிமுடி தரித்து வைரத்தின் கசிதமான சிம்மாசனத்தில் செங்கோல் தாங்கி அமர்ந்து

அரசாட்சி செய்யப் போகிறளு! இதை நினைத்தால் அவளுக்குச் சிரிப்பும் வெறுப்பும் ஏற்படாமல் என்ன செய்யும்!

அவள் தனிமையில் அமர்ந்து யோசித்துக் கொண்டிருக்கும்போது அவளுக்குச் சமீபமாக யாரோ வந்து நிற்பது போல் தோன்றியது. அவள் தலை நிமிர்ந்து பார்த்தபொழுது அவளுக்கு எதிரே வயதான கிழவி ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். அந்தக் கிழவி வள்ளியைப் பார்த்த பார்வையில் விஷம் போன்ற ஒரு வெறுப்புக் கலந்திருந்தது.



நரை நரையாக இருக்கும் அவளுடைய நரைத்த தலை மயிரும், சுருக்கம் விழுந்து தொங்கும் சதையோடு இருக்கும் அவளுடைய முகமும் எப்பொழுதும் வள்ளிக்கு ஒரு அருவருப்பையும் பயத்தையும் உண்டாக்கும். அந்த காடோடிகளின் கூட்டத்திலேயே அந்தக் கிழவிதான் வயதானவள். அவள் பெயர் போத்தியம்மா. போத்தியம்மா வள்ளியின் கணவன் மல்லய்யனுக்குத் தாய்வழிப் பாட்டி. போத்திக்கு எப்பொழுதுமே வள்ளியைக் கண்டால் பிடிக்காது. இதற்குக் காரணம் தன் பேரன் தங்கள் கூட்டத்திலுள்ள பெண்களையெல்லாம் விட்டு விட்டு அன்னியமான அவளை எங்கிருந்தோ அழைத்துக் கொண்டு வந்து கல்யாணம் செய்து கொண்டதுதான். தவிர மல்லய்யன் இறந்த பிறகு போத்திக்கு வள்ளியின் மீதிருந்த வெறுப்பு அதிகமாயிற்று. அன்னியப் பெண்ணாகிய வள்ளியைக் கல்யாணம் செய்து கொண்ட தோஷத்தினால்தான் தன் பேரன் இறந்து விட்டான் என்பது அந்தக் கிழவியின் முடிவான தீர்மானம். இவைகளையெல்லாம் விடப் போத்திக்கு அருவருப்பையும் ஆத்திரத்தையும் உண்டாக்கிய விஷயம் வள்ளி கர்ப்பிணியாக இருப்பதுதான். அவளுடைய வயிற்றிலும் ஒரு குழந்தை பிறந்து அந்த காடோடிகளுக்கு ராஜாவாகவோ ராணியாகவோ இருந்து அதிகாரம் செலுத்தப் போகிறதே என்ற புகைச்சலும் பொறுமையும் போத்திக்கு அசாத்தியமாக இருந்தது.

போத்தி குனிந்து வள்ளியின் முகத்தை உற்றுப் பார்த்து விட்டு வெறுப்போடு, "ஹாம்—நீயா!... இங்கே ஏன் தனியா உட்கார்ந்திருக்கே......! எங்களை எல்லாம் கண்டால் உனக்குப் பிடிக்கவில்லே. இல்லையா......! எனக்குத் தெரியும். எங்களை எல்லாம் விட்டு விலகி ஓடிவிட்டா நல்லதுன்னு நீ நினைக்கிறே......இல்லையா! நீ எங்களையெல்லாம் கள்ளத்தன முள்ளவங்க, சோம்பேறிங்கன்னு நினைக்கிறே. நீ ஏதோ சீமான் வீட்டுப் பெண் போலக் கர்வத்தோடு அதிகாரம் செலுத்திக்கிட்டு இருக்கணும்னு பார்க்கறே. அது இங்கே முடியாது. நீ எங்களை விட்டு வயிற்றிலிருக்கும் குழந்தையோடு எங்கும் ஓடிவிட முடியாது. அதைப் பெற்றுக் கொடுத்து விட்டு நீ எங்காவது ஓடு. அதைப்பற்றி எங்களுக்குக் கவலை இல்லே. புரிந்ததா!" என்று என்னென்னவோ பொரிந்து தள்ளினாள்.

போத்தியின் அர்த்தமற்ற பேச்சுக்களையும், படபடப்பான வெறுப்பு நிறைந்த விஷமான வார்த்தைகளையும் வள்ளி எவ்வளவோ கேட்டிருக்கிறாள். போத்தியின் சொல்லம்புகள் அவள் இருதயத்தில் வேதனையை உண்டாக்கினாலும் அவள் பதிலுக்குக் கோபமாகவோ ஆத்திரமாகவோ எதுவும் பேசவில்லை. "எனக்கு உடம்பு சரியாய் இல்லே, பாட்டி! இன்று முழுதும் உடம்பு வலி. அதனால்தான் தனியாக

உட்கார்ந்திருக்கிறேன். இல்லாவிட்டால் இப்படி......" என்றாள் மிகவும் சாந்தமாக.

போத்தியின் முகத்தில் ஒரு அலட்சியமும் கடுகடுப்பும் தோன்றின. "சாகசக் கள்ளி! வீணாக வேஷம் போடாதே. உனக்கு எதற்காகத் தயவு காட்டுகிறோம், தெரியுமா? உன் வயிற்றிலிருக்கிற குழந்தைக்காக. உனக்கு எப்பொழுது குழந்தை பிறக்குமென்று எனக்குத் தெரியும். உடம்பு சரியில்லை என்று சொல்லி இப்பொழுதெல்லாம் சீவித்தனம் செய்யாதே" என்றாள். அப்பொழுது போத்தியம்மா சமயம் வாய்த்ததென்று மனம் போனபடி யெல்லாம் திட்டுவதற்குத் தயாராய் இருந்தாள். ஆனால் அந்தச் சமயத்தில் அவர்களை நோக்கி ஒரு உருவம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. அவர்களை நெருங்கி வந்து கொண்டிருப்பவன் பெத்தண்ணன் என்று அவர்களுக்குத் தெளிவாக விளங்கியது.

பெத்தண்ணன் பெயருக்கேற்றாற் போல் நல்ல பருமனும் அதற்கேற்ற உயரமும் கொண்டவனாக இருந்தான். அங்குமிங்கும் நரையோடியிருந்த குட்டையான தாடி. அடர்ந்த புருவம். பெரிய விழிகள். தலையில் ஒரு சிவப்பு முண்டாசு. பல வர்ணங்களில் கோடு போடப்பட்ட பனியன் ஒன்றை அணிந்திருந்தான். கழுத்தில் கறுப்புக் கயிற்றில் கோக்கப்பட்ட சதுரமான தாயத்து ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அவன் கையில் புகையிலைச் சுருட்டு ஒன்று புகைந்து கொண்டிருந்தது. அந்த நாடோடிக் குழுவுக்கு உரிமையுள்ள ஒரு ராஜாவோ ராணியோ ஏற்பட்டு, அந்தக் குழந்தைக்கு ஆளும் தகுதி வரும் வரையில் பெத்தண்ணன் தான் தலைவன்.

பெத்தண்ணன் நெருங்கி வந்து வள்ளியையும் போத்தியையும் பார்த்துவிட்டு, "வள்ளிக்கு ஏதேனும் உடம்பு சரியில்லையா, தாயி!......" என்று போத்தியிடம் கேட்டான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இவள் என்னமோ சீமான் வீட்டுப் பெண் கணக்காகத் தன்னை நினைச்சிக் கிட்டிருக்கா. இதற்கு முன் எவருக்குமே குழந்தை பிறந்ததில்லை என்று இவளுடைய நினைப்பு. இவள் ஏதோ பெரிய மாளிகையில் பெருமையோடு வாழவேணும் என்று நினைக்கிறதாகத்தான் எனக்குத் தோணுது......" என்று சொல்லிக் கொண்டே அந்த இடத்தை விட்டுச் சென்றாள் போத்தி.

பெத்தண்ணன் வள்ளியை உற்றுப் பார்த்துக் கொண்டே, "வள்ளியம்மா, உனக்கு உடம்பில் எதுவும் கோளாறு இல்லையே?......" என்று மிகப் பரிவுடன் கேட்டான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை" என்றாள் வள்ளி.

"உன் உடம்பில் ஏதேனும் வேதனை இருந்தால் சொல்லு. பிறக்கப் போகிற குழந்தைக்கு எவ்விதக் கெடுதலும் ஏற்படக் கூடாது என்கிறது தான் எங்கள் விருப்பம்" என்றான் பெத்தண்ணன்.

'அவர்களுடைய சிரத்தைக்கும் அவனிடம் அவர்கள் காட்டும் கருணைக்கும் காரணம் இது தான். அவள் வயிற்றி லிருக்கும் குழந்தைக்குத் தகப்பன் மல்லய்யன். அது அவர்களுடைய ராஜாவோ, ராணியோ! ஆனால் அவள் தாய்; சாதாரணத் தாய். அந்த ராஜாவையோ ராணியையோ பத்து மாதம் சுமக்கத்தான் அவளுக்கு உரிமை. அவர்கள் முக்கியமாகக் குழந்தையைப் பற்றிக் கவலைப் படாவிட்டால் அவளைப்பற்றி ஏன் கவலைப்படப் போகிறார்கள்!' இந்த எண்ணம் தான் வள்ளியின் மனத்தில் அப்பொழுது உறுத்திக் கொண்டிருந்தது. அவள் மனத்திலெழுந்த எண்ணத்தை யெல்லாம் பெத்தண்ணனிடம் சொல்ல முடியுமா? "என்னைப் பற்றிக் கவலைப் படாதீங்க. என் உடம்பை நான் கவனித்துக் கொள்கிறேன். உங்களுக்குக் குழந்தைதானே முக்கியம்!" என்றாள்.

"ஆமாம். அதுதான் முக்கியம். அதற்கப்புறம் நீ மறுபடியும் யாரையாவது கல்யாணம் செய்து கொண்டால்கூட எங்களுக்குக் கவலை இல்லை. அப்பொழுது உனக்கு இருபது குழந்தை பிறந்தாலும் எங்களுக்கு அக்கறை இல்லை. இது மல்லய்யனின் குழந்தை. அவனைப்போல் பலசாலியான அழகான ஒரு ஆண் குழந்தையைப் பெத்துக் கொடு, போதும்" என்று சொல்லிவிட்டுச் சிறிது தூரத்திலுள்ள தன் கூட்டத்ினரைப் பெரும் போக்காக ஒரு தடவை பார்த்தான் பெத்தண்ணன். பிறகு, "நாளை தினம் நாங்களெல்லாம் இந்த இடத்தை விட்டுக் கிளம்பப் போகிறோம். நாளையிலிருந்து கும்பகோணத்தில் மகத் திருவிழா ஆரம்பமாகுது. அங்கே போனால் நல்ல பணம் சம்பாதிக்கலாம். உன்னுடைய நிலைமையிலே நீ அவ்வளவு தூரம் நடந்து வர முடியாது. நாங்கள் உன்னை அழைச்சுக் கிட்டுப் போவதும் கெடுதல். குழந்தை பிறக்கும் வரையில் நீ இங்கேயேதான் இருக்கணும். போத்திப் பாட்டி உன்னை கவனிச்சுக்கு வா. அவளைச் சாதாரணமாக நினைக்காதே. பொல்லாதவளாக இருந்தாலும் இந்தக் கூட்டத்திலேயே அவள்தான் அதிக அனுபவமுள்ளவள். நல்ல மருத்துவச்சி. பயப்படாதே! குழந்தை பிறந்த பிறகு நீ மறுபடியும் எங்களோடு கலந்து கொள்ளலாம். இல்லாட்டிக் குழந்தையை விட்டு விட்டு உன் இஷ்டப் பிரகாரம் எங்காவது போகிறதா யிருந்தாலும் போகலாம்..." என்று சொல்லிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றான். (தொடரும்)

# ஆரோக்கிய ரகசியம்

## வி. என். குமாரசாமி

## 30. ஆஸ்துமா

“ஆஸ்துமா” இன்றைய விஞ்ஞான உலகத்தின் நோய்ப் பிரச்னை. இதுவரை கணக்கற்ற மருந்துகளைக் கண்டு பிடித்திருக்கின்றனர். ஆனால் அவையெல்லாம் தற்கால சாந்தியே தவிர பூரணமாய் நீக்கும் போக்க முடியாது என்று வைத்திய உலகமே ஒப்புக் கொண்டிருக்கிறது. இந்த முடிவு இன்று நேற்று செய்ததல்ல. "1927-ம் வருடத்தில் லண்டன்மா நகரில் “ஆஸ்துமா பரிசோதனைக்கமிட்டி” கூடி முடிவு செய்தது. அதன் காரண காரியங்களை அறிந்து, தர்க்கித்துக் கடைசியில், “ஆஸ்துமாவை மருந்தினால் பூரணமாய்க் குணமாக்க முடியாது; தேகப் பயிற்சிகளினால்தான் குணமாக்க முடியும்” என்று ஒரே தீர்மானமாக முடிவு கட்டி விட்டார்கள்.

இவ்வளவு கலபமாக எப்பொழுதோ முடிவு செய்த ஒரு விஷயத்தைப் பற்றி நடைமுறையில் அதை நடத்துவாரில்லாததுதான் ஆச்சரியமாயிருக்கிறது. அப்படி தைரியமாய்ச் செயலிலும் காட்டுவதாய் இருந்திருந்தால் இன்று லக்ஷக்கணக்கான. ஏன், உலகம் பூராவும் கணக்கிட்டால் கோடிக்கணக்கானவர்கள் என்று கூடச் சொல்லலாம். அத்தனை ஆத்மாக்களும் பிழைக்க மாட்டாமலும், சாகவும் மாட்டாமல், தத்தளித்துக் கொண்டிருக்க மாட்டார்கள். சாதாரணமாய் நம்மைப் போல நிம்மதியாய் மூச்சு வாங்கி விட்டுக் கொண்டிருப்பார்கள்.

ஆஸ்துமா ரோகிகளின் பிரச்னை யெல்லாம் நம்மைப் போல சாதாரணமாய் மூச்சுவிடவும் வாங்கவும் செய்ய வேண்டு மென்பதே. உலகத்தில் இதைத் தவிர வேறு ஒன்றின்மேலும் அவர்களுக்கு இச்சை கிடையாது. ஏதாவது இருந்தால் அதெல்லாம் இதற்குப் பிறகேயாகும். பலவித நோய்கள் இருக்கின்றன. அவைகளில் சிலவற்றால் உயிரையும் மாய்த்துக் கொள்ளலாம் என்ற துணிவுகூட உண்டாகிவிடும். வயிற்று வலி, அப்பெண்டிஸிடிஸ் வலி முதலியவை அவ்வித துணிவை உண்டாக்கிவிடும். எத்தனையோ பேர், வயிற்று வலி பொறுக்கமாட்டாமல், கிணற்றிலும், குளத்திலும் விழுந்து தற்கொலை செய்து கொண்டார்களென்று நாம் பத்திரிகைகளில் படிக்கவில்லையா! ஆனால் எந்த ‘ஆஸ்துமா’ ரோகியாவது, அப்படிக் கிணற்றிலோ குளத்திலோ விழுந்து தற்கொலை செய்து கொண்டதாகப் படித்திருக்கிறோமா! அல்லது கேள்விப் பட்டாவதிருக்கிறோமா! அப்படி ஒன்றும் நடந்ததாகத் தெரியவில்லை. அதற்குப் பதிலாக ‘ இன்னும் உயிரின்மேல் அவர்களுக்கு அதிகப் பற்றுதான் உண்டாகும். ஒரு மூச்சு நன்றாய் விட்டால் போதுமே என்று ஏங்குவார்கள்.

ஆஸ்துமா எப்பொழுதுமே இருக்காது. சிலருக்கு இரவில் படுக்கப் போகும்போது வந்துவிடும். சிலருக்குப் படுத்த சிறிது நேரத்தில் வரும். சிலருக்கு அதிகாலையில் வரும். சிலருக்கு வெய்யில் தணிந்ததும் வரும், சிலருக்கு கடுமையான வெய்யில் சமயத்திலும் இருக்கும், சிலருக்குப் பேசினால் வந்துவிடும். சிலருக்குக் கோபத்தினால் ஆத்திரப்பட்டுப் பேசினால் வந்துவிடும். சிலருக்கு வெய்யில் காலத்தில் இருக்காது. மழை, பனிக்காலம் வந்ததும் வந்துவிடும். சிலருக்கு வெய்யிற் காலத்தில் மழைக்காக குளிர்ந்த காற்று அடித்ததும் சீதோஷ்ணமானி அதன் குறியைக் காட்டுவது போல இவர்களுக்கு ஆஸ்துமா ஆரம்பித்து விடும். இதைக் கொண்டு “சரி! மழை வரும்போலிருக்கிறது” என்று நிர்மாணிக்கலாம். சிலருக்கு வெய்யில் காலத்தில் வேர்த்தாலும் வந்து விடும். சிலருக்கு ஆஸ்துமா வந்தால் பக்கத்திலிருப்பவர்களுக்கு இழுப்பின் சப்தம் ‘கர் கர்’ என்று கேட்கும். சிலருக்குக் கேட்காது. ஆனால் அவர்களுக்கு நன்கு கேட்கும். சிலருக்குச் சற்று அலைந்து வேலை செய்தாலும், உடலை அலட்டிக் கொண்டாலும் உடனே ஆஸ்துமா வந்துவிடும். முற்றின ஆஸ்துமா ரோகிகளைப் பார்க்கவும் நமக்குக் கஷ்டமாயிருக்கும். நீந்தத் தெரியாதவர்கள் தண்ணீரில் விழுந்துவிட்டால் மூச்சுக்காக எப்படித் திணறுவார்களோ அப்படித் திணறுவார்கள். இப்படிச் சில நாட்களும் தொடர்ந்து இருக்கும். படுக்க முடியாமல் முன் பக்கம் சாய்ந்து தலையணைகளைப் போட்டு அப்படியே சாய்ந்திருப்பர். பின் பக்கம் உயரமாகத் தலையணைகளைப் போட்டுச் சாய்வர். தூக்கம் வராது. இவ்வாறு பல இரவுகள் தூக்கமின்றி மூச்சுக்கு மன்றாடிக் கண் குழி விழுந்து, கண் இமைகள் உயிரிழந்து, முகம் வெளுத்துப் பார்க்கப் பரிதாபமாயிருக்கும். பிரம்ம ராக்ஷதன் வந்து மென்னியைப் பிடித்துக் கொண்டால் எந்த நிலைமையில் இருப்பார்களோ அப்படித் தோன்றும் அவர்களைப் பார்த்தால்.

நண்பர்கள், உற்றார், உறவினர், சுற்றம், மனைவி, புருஷன் பிள்ளைகள் இருந்து யாது பயன்! “காதற்ற ஊசியும் வாராதுகாண் கடை வழிக்கே” என்று பட்டினத்தடிகள் பாடியிருக்கிறார். கடைவழிக்கு ஏன் போக வேண்டும்! நம் கண் முன்னே இந்த இவ்வழிக்கே உதவாமல் பல சமயம் போய்விடுகின்றதல்லவா! தமிழ் கடைமையா! ஐயோ! பாவம்! எத்தனை நேரம் நீ தூங்கிக் கொண்டு கஷ்டப்படுவாய்! என்னிடமும் சிறிது நேரம் கொடு என்று மாற்றிக் கொள்ள! அனுதாபப்



அம்மா :—ஏண்டா ராமு, நேற்றைக்குத் தானே ஒரு பென்ஸில் வாங்கினாய்? அதற்குள்ளே இன்றைக்கு வேறே எதற்கு?

ராமு :—நீ தான் காசு கொடுக்கும் போதே, ‘வாங்கித் தொலை’ என்று சொன்னாயே, அம்மா!

படலாம். சிசுருஷை செய்யலாம். ஆதரவாயிருக்கலாம். கனிந்த மொழிகள் பேசலாம். ஆனால் அதுவும் எத்தனை நாளுக்கு! பணம் படைத்தவர்களுக்கு இவை சிறிது கிடைக்கும். இல்லாதவனுக்கு!

ஆஸ்துமாவிற் கென்று பல மருந்துகளுண்டு. பல வைத்தியங்களு முண்டு. ஆயுர்வேத, சித்த, யூனானி, ஹோமியோபதி, அலோபதி முதல் சகலத் திலும் மருந்துகள் பல உண்டு. இத்தனையும் போதாதென்று பத்திரிகைகளில் விளம்பர மருந்துகள் ஏராளம் உண்டு. ஒரே இரவில் ஆஸ்துமா சளியைக் கரைப்பது முதல் ஒரே வாரத்தில் ஆஸ்துமாவிலிருந்து விடுதலை அளிக்கும் மருந்துகள் வரை விளம்பரங்களில் காணலாம். இத்தனையிலிருந்தும் ஆஸ்துமாவை விடை கொடுத்து அனுப்ப முடியவில்லை. அடக்கி வைக்கத்தான் முடிகிறது.

ஆஸ்துமாக்காரர்களுக்குப் பலவிதமான மருத்துவம் கிடைக்கும். ஒன்றிலும் திருப்தி அடைய மாட்டார்கள். ஒத்தடம் கொடுப்பார்கள். தைலங்களை மார்புக்குப் போட்டுத் தேய்ப்பார்கள். புகை பிடிப்பார்கள். சிலவித மருந்துகளை முகர விடுவார்கள். உள்ளுக்குக் கஷாயம், லேகியம், மாத்திரைகள், நீர் மருந்துகள், ஊசிகள் மூலம் உள்ளுக்குச் செலுத்தும் சில மருந்துகள் முதல் சகல வைத்தியமும் கிடைக்கும்.

ஆஸ்துமா வென்பது என்ன! ஏன் மூச்சு இணறுகின்றது! "கர்கர்" என்ற சத்தம் எதனால் உண்டாகிறது! என்று தெரிந்து கொண்டால் இம் மருந்துக ளெல்லாம் எதுவரைக்கும் வேலை செய்யும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

மூச்சுக் குழாய் இரண்டு மூக்குத் துவாரத்திலிருந்து ஆரம்பித்துச் சிறிது தூரத்தில் ஒன்றாகச் சேர்ந்து ஒரே குழாயின் வழியாக உள் சென்று அங்கிருந்து இரண்டாக இரண்டு நுரை ஈரல்களுக்குப் பிரிகின்றன. அப்படிப் பிரியும் குழாயில் பெரிய மரங்களுக்குப் பல கிளைகள் பிரிந்து அதிலிருந்து இன்னமும் சிறிய கிளைகள் பிரிவதைப் போலப் பெரிய குழாயிலிருந்து, பல பிரிவுகளாகப் பிரிந்து பிறகு அதிலிருந்து பல சிறிய பொடிக் குழாய்களாகப் பிரிகின்றன. அப்படிப் பிரியும் சிறிய குழாயின் கனம் ஒரு அங்குலத்தில் நூற்பதில் ஒரு பாகக் கனம்தான் உடையது. அதாவது மயிரிழை போன்றது. இக் குழாய்களின் உள் சுவர்கள் காற்று போகவும் வரவும் சௌகரியமாயிருக்கும் பொருட்டு மெல்லிய சவ்வுகளால் ஆக்கப்பட்டிருக்கின்றன. பெரிய காற்றுக் குழாயின் ஆரம்பத்தின் கனம் இரண்டங்குலமாயிருக்கும். பிறகு சிறிது சிறிதாகக் குறைந்து கடைசியில் மயிரிழை போன்று இருக்கும். குழாய்களில் சுத்து எவ்வளவு இருக்கக்கூடும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள். அதன் வழியாகவும், காற்று போயும் வந்து கொண்டுமிருக்கும் சிறிது வேகமாகக் காற்று இழுத்தாலும், விட்டாலும், சப்தம் கேட்கின்ற தல்லவா! அந்தச் சிறிய காற்றுக் குழாயில் காற்று நிறைந்து போகும்போது, ஊது குழலில் ஊதினால் சத்தம் உண்டாவதைப் போல உஸ் என்ற சத்தம் உண்டாகிறது. இது சாதாரணமானவர்களுக்கு வேண்டுமென்றே செய்வதில் உண்டாவது.

ஆஸ்துமாக்காரர்களுக்கு வேண்டுமென்றே செய்ய வேண்டியதுமில்லை. யாராவது வேண்டுமென்று செய்வார்களா! அந்த மிக மெல்லிய மயிரிழை போன்ற குழாய்கள் பல காரணங்களால் சுருங்கிவிடும். வழி சுருங்கி விட்டால் காற்று நுழைந்து போகும்போது சத்தம் உண்டாகத் தானே செய்யும்! அதுதான் ஸ்வாசகாசம் என்பது. இது நீடித்து இருந்தால் மூச்சுத் திணறுவது சகஜந்தானே! சிலருக்குச் சளியும் உற்பத்தியாகி அந்தச் சிறு துவாரங்களையும் அடைத்துக் கொள்ளும். சளி எப்படி உண்டாகின்றது என்பதை இரண்டாவது பாகம் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் 'ஜலதோஷம்' என்னும் தலைப்பில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அப்படிச் சளியும் உண்டாகி விட்டால் ஆஸ்துமாக்காரர்களுக்குச் சங்கடம் சொல்லி முடியாது. சளியை வெளியேற்ற வேண்டி இருமல் வரும். இருமல் வருவது நல்லது தான். இருமலென்பது நாம் முதலில் மூச்சின் வழியாகக் காற்று இழுப்பது போதாதென்று வாயின் வழியாகவும் காற்று இழுத்து உள்ளே அனுப்புகிறோம். அக்காற்று — பிராண வாயு உட்சென்றதும் சளியை அழுத்து வழி செய்கிறது. அதை வெளியே தள்ள ஒரு உணர்ச்சி—இருமலை வருவிக்கின்றது. அப்பொழுது சளி வெளியில் வருகின்றது. சிலருக்குச் சளி மிகக் கட்டியாயிருக்கும். அவர்கள் இருமி, இருமி அதை வெளியில் எடுக்க சிரமப்பட வேண்டியதாயிருக்கும்.

இவர்களுக்கு உடனடியாக வேண்டியது உஷ்ணம்தான். சளியைக் கரைக்கக் கூடிய சுருங்கிய காற்றுக் குழாய்கள் விரிய வேண்டும். அதற்குப் பல மருந்துகள் உடனடியாக நிவாரணமளிக்க இருக்கின்றன. டெலபோராஜு, நைட்ரோ கிளிசிரின், அட்ரினெலின் முதலிய ஊசி மருந்துகள் கொடுப்பார்கள். அட்ரினெலினை, மென்தால், தைமல் முதலியவைகளில் கலந்தும் கொடுக்கிறார்கள். சமீபத்தில் அட்ரினெலினுடன் பிட்யூடரின் கலந்தும் கொடுத்தால் நல்ல சாந்தி கிடைக்கிறது என்று இரண்டு மருந்துகளையும் கலந்து கொடுத்து வருகிறார்கள்.

இந்த இரண்டு பெயர்களிலிருந்து வேர்கள் அநேகமாய்த் தெரிந்து கொண்டிருக்கலாம். அதாவது அட்ரினெலின் என்னும் மருந்து அட்ரினெல் கோளத்திலிருந்து வரும் ஹார்மோனிலிருந்து தயார் செய்தது. அந்தக் கோளங்களைப் பற்றி முதல் பாகம் நாற்பத்தொன்பதாவது அத்தியாயத்தில் தெளிவாக விளக்கப் பட்டிருக்கிறது. அது ரத்தத் துடிப்பை வேகப்படுத்தக் கூடியது. உஷ்ணத்தையும் தரக்கூடியது. பிட்யூடரி கோளத்தின் மேன்மையைப் பற்றி இரண்டாவது பாகம் முதலிருந்தே சிரசாசன அத்தியாயங்களில் கூறப்பட்டிருக்கிறது. பிட்யூடரி கோளத்தின் ஹார்மோன் தன் இச்சையாக சூட்டையும் வேகத்தையும் கொடுக்கக் கூடியது. ஆக பிட்யூடரி கோளத்தின் ஹார்மோனையும், அட்ரினெல் கோளத்தின் ஹார்மோனையும் கலந்து ஊசி மூலம் உடலில் ஏற்றினதும் உடல் உறுப்புகள், முக்கியமாய்ச் சுருங்கிய காற்றுக் குழாய்கள் விரிவடைந்து காற்று தாராளமாகப் போகவும் வரவும் வழி செய்கிறது. தவிர இரத்தத்தில் சூடும் வேகமும் உண்டாகி சளி உண்டாவதைக் குறைக்கிறது. ஆனால் இது எதுமட்டும் நடைபெறும்! மருந்தின் வேகம் ரத்தத்தில் இருக்கும் வரைக்கும் தான் நோயாளிக்கு இதமாயிருக்கும். ஆனால் மருந்து மூத்திரக் காய்களின் மூலம் வடிகட்டிய பின், பழைய குருடி கதையாய் முடிகிறது. மறுபடியும் ஊசி போட வேண்டியதுதான். அதற்குப் பதில் இயற்கையாய் உடலில் இருக்கும் பிட்யூடரி கோளத்தையும், அட்ரினெல் கோளத்தையும் வேலை செய்வித்தால் இந்தச் சங்கடங்களுக்கெல்லாம் இடமில்லை. அப்படி செய்விப்பது தான் விபரீத கரணி என்னும் ஆசனம். (தொடரும்)




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 181-60 TM

# பாம்பாட்டி

எஸ். ராமன்

வீரப்பனின் செல்வப் புதல்வனும், வள்ளியின் ஆசைக் குமாரனும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான் நாகப்பன். வீரப்பன், தன் குலத் தொழிலான பாம்பாட்டி வித்தையை நாகப்பனுக்குக் கற்றுக் கொடுத்தான். நாள் ஆக ஆக, வீரப்பனால் வெளியில் செல்ல முடியவில்லை. வயோதிகத் தந்தையையும், தாயையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பைச் சின்ன வயதிலேயே நாகப்பன் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

நாகப்பன் நன்றாக மகுடி ஊதுவான். அதுவும், அவன் புன்னாகவராளி ராகத்தை மகுடியில் வாசிப்பதைக் கேட்க வேண்டும். அதில் மயங்காத சர்ப்பமே கிடையாது! ஐந்து தலை நாகம் நேரில் வந்தால் அதைக்கூட தன் மகுடியின் கீதத்தால் மயங்கிவிடும்படிச் செய்து விடுவான் நாகப்பன்.

அடிக்கடி பக்கத்திலுள்ள காடுகளுக்குச் சென்று சர்ப்பங்கள் பிடித்து வருவது அவன் வழக்கம். அவைகளில் சிலவற்றை விற்று வீட்டுச் செலவுக்குப் பணம் சம்பாதிப்பான். சிலவற்றை நன்றாகப் பழக்கி ஆட வைத்தும், வேடிக்கைகள் காண்பித்தும் பணம் சேர்ப்பது அவன் வழக்கம். பாம்புக் கடிக்குப் பல வித மருந்துகள் தெரிந்து வைத்திருந்தான் அவன். பாம்பு பிடிப்பதிலும், பழக்குவதிலும் நிகரற்று விளங்கி வந்தான். ஆகையால், அந்தப் பக்கங்களில் அவனைத் தெரியாதவர்கள் யாருமே இல்லை என்று சொல்லி விடலாம். ஊரில் எங்கு பாம்புத் தொந்தரவு என்றாலும் நாகப்பனுக்கு அழைப்பு வரும். எவ்வளவு பெரிய சர்ப்பமானாலும் அதை அடக்கிப் பெட்டியில் அடைத்து விடுவான்.

வீரப்பனுக்கு வயது அறுபது மேல் ஆகி விட்டது. வள்ளியும் தள்ளாமை யடைந்து விட்டாள். ஆனால் அவர்கள் இருவருக்கும் ஓரே ஒரு ஆசை. அதுதான், நாகப்பனுக்குக் கல்யாணம் செய்து பார்க்க வேண்டுமென்பது. அவர்கள் ஆசையும் ஒரு விதமாக நிவர்த்தி யடைந்தது. வீரப்பனின் அக்காள் மகளான செல்வியை நாகப்பனுக்கு விவாகம் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. நாகப்பனுக்கும் இதில் திருப்திதான்.

* * *

செல்வியின் அழகுக்குச் செல்வியைத் தான் இணை சொல்ல வேண்டும். அவளைப் போன்ற அழகி அந்தப் பக்கத்திலேயே யாரும் இல்லை யென்று அந்த ஊர் ஜனங்கள் பேசிப் பெருமைப் படுவார்கள்.

செல்வி 'லக்ஷ்மி' என்ற ஒரு பசுவைச் செல்லமாக வளர்த்து வந்தாள். தினமும் காலையில் செல்வி, பக்கத்தில் ஓடும் ஆற்றில் குளித்து, பளிச்சென்று நெற்றியில் குங்குமம் வைத்து, சுருண்டு தொங்கும் கரும் கூந்தலை அள்ளிச் செருகிக் கொள்வாள். வீட்டு வாசலில் அருமையாக வளர்த்து வரும் மல்லிகைச் செடியிலிருந்து ஒரு மலர்க் கொத்தைப் பறித்துத் தன் கொண்டையில் செருகிக் கொண்டு ஒரு கையில் பூவரசன் குச்சி ஒன்றை எடுத்துக் கொண்டு, மற்றொரு கையில் தன் அருமை லக்ஷ்மியை, 'ஹை' 'ஹை' என்று ஓட்டிக் கொண்டு வயல் வெளியை நோக்கிச் செல்லுவாள். அந்த அருமையான காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

லக்ஷ்மி நிறை மாத கர்ப்பிணி. அது வயல் நடுவே பசும்புல்லை மேய்வதைக் கண்டு தூரத்தில் அதையே உற்று நோக்கிக் கொண்டிருக்கும் செல்வியின் உள்ளம் உவகை எய்தும். லக்ஷ்மி கன்று போட்டால் அதற்கு என்ன பெயர் வைப்பது, மேய்க்க வரும் போது அதையும்கூட அழைத்து வருவதா என்றெல்லாம் செல்வியின் அன்பு மனம் கற்பனை செய்து கொண்டிருக்கும்!

அன்று வெள்ளிக்கிழமை. செல்வி, லக்ஷ்மியை நன்றாகக் குளிப்பாட்டி, நெற்றியில் அழகாக மஞ்சளும் அதன் நடுவில் குங்குமமும் வைத்தாள். பிறகு அதை ஓட்டிக் கொண்டு வயல் வெளிக்குச் சென்றாள்.

"லக்ஷ்மி! இன்று நீ தனியாக மேய்வதற்கு போகிறாய். சில நாளில் உன் குழந்தையும் உன்னோடு வரும். உன் குழந்தையை உன்னிடமிருந்து பிரிக்கவே மாட்டேன்" என்றெல்லாம் சொன்னாள். பசுவும், தான் ரொம்பவும் சந்தோஷப்படுவது போல் செல்வியைத் திரும்பி, திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றது. வயல் வெளி வந்ததும் செல்வி லக்ஷ்மியை விட்டு விட்டு, மரத்தடியில் படுத்தாள். லக்ஷ்மியின் கன்றைப் பற்றிய சிந்தனையிலே ஈடுபட்ட அவள், தன்னையும் மறந்து தூங்கிவிட்டாள்.

நல்ல உச்சிவேளை. திடீரென்று, "அம்மா!" என்ற அலறல் நான்கு திசைகளையும் தாக்கி எதிரொலித்தது. செல்வி திடுக்கிட்டு எழுந்தாள். லக்ஷ்மி இருந்த திக்கை மிக்க ஆவலுடன் நோக்கினாள். லக்ஷ்மி, செல்வியைப் பரிதாபமாக ஒருமுறை நோக்கிவிட்டு திடீரென்று பூமியில் சாய்ந்தது. செல்வி ஓடிச் சென்று அதைப் பார்த்தாள். அவளுக்கு ஒன்றும் தெரியவில்லை. அழுதாள், கதறினாள். ஆனால் லக்ஷ்மி, தன் செல்வத்துடனேயே, மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டது. லக்ஷ்மி சர்ப்பம் தீண்டி இறந்து விட்டது. செல்வி கதறினாள். அழுது அழுது புலம்பினாள். கடைசியில் வேறு வழியின்றித் தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டாள்.



நண்பன்:—ஏன் ஸார், உங்கள் சின்னப் பையனிடம் காரைக் கொடுத்து அனுப்புகிறீர்களே, பயமாக இல்லையா?

மற்றவர்:—என்ன பண்ணலாம்! பட்டணத்துத் தெருக்களில் அவனை நடந்து போகச் சொல்லுவதற்குத் தைரியம் வரமாட்டேன் என்கிறதே!

இந்தச் சம்பவத்தில் இருந்து, செல்விக்குச் சர்ப்பம் என்ற பெயரைக் கேட்டாலே ஒரு வெறுப்பு. ஒரே நடுக்கம். எங்காவது, யாராவது சர்ப்பத்தைப் பற்றிப் பேசினால் கூட, செல்வி காதைப் பொத்திக் கொண்டு தூரப் போய் விடுவாள். இந்த வெறுப்பு, அவள் மனத்தில் நன்றாக வேரூன்றி விட்டது.

* * *

எதிர் பாராமல், ஒருநாள் செல்வியின் குடிசைக்கு அவள் மாமனும் மாமியும் வந்தார்கள். செல்வியின் தாய், தகப்பனிடம் நாகப்பனின் கல்யாண விஷயத்தைப் பற்றியும், தங்களுக்கு வயதாகி விட்டதால் அதிக மாக நாள் கடத்த முடியாது என்றும் சொன்னார்கள். செல்வியின் தாய், தந்தையரும் இந்த ஏற்பாட்டைப் பூர்ண சம்மதத்துடன் ஏற்றுக் கொண்டனர். இவற்றை யெல்லாம், மறைவிலிருந்து கேட்ட செல்விக்கு, இருதயத் துடிப்பே நின்று விடும்போலிருந்தது. ஏன்? நாகப்பன் ஒரு 'பாம்பாட்டி'. அவளுக்கு ஒரு கணம், சர்ப்பத்தால் தன் லக்ஷ்மிக்கு நேர்ந்த கதியை எண்ணி உடம்பு நடுக்க மெடுத்தது. ஆனால் உடனே நாகப்பனின் கருட்டையான கிராப்புத் தலையும், முறுக்கி விட்ட மீசையும், கட்டுமஸ்தான தேகமும் அவனையே மெய் மறக்கச் செய்துவிட்டன. ஆனால், தான் விவாகத்திற்குப் பின் தன் அன்பினால் அவன் அந்தத் தொழிலையே விட்டு விடும்படி செய்து விடலாம் என்ற நம்பிக்கையுடன், அவளும் விவாகத்துக்குத் தன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டாள்.

கடைசியில் ஒரு நல்ல சுப தினத்தில் செல்வி நாகப்பன் கையைப் பற்றினாள். ஆனால் அவள் உள்ளத்திலே ஒரே ஏக்கம், காரண மற்ற பிரமை இருந்து வந்தது.

நாகப்பன் தன் காதலியைப் பற்றிய பெருமையிலே ஆழ்ந்திருந்தான். செல்வியும் காதலனின் அன்பிலே ஆழ்ந்திருந்தாள். ஆனால், அவள் இதயத்தில் மாத்திரம், எப்படியாவது தன் கணவனை இந்தப் பாம்பாட்டித் தொழிலை மறந்து விடும்படி செய்யவேண்டு மென்றும் எண்ணம் இருந்து வந்தது.

வயோதிகர்களான வள்ளியும், வீரப்பனும் தம் மகனும், மருமகளும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துவதைக் கண்டு மனம் பூரித்தனர். அவர்களுக்கு ஒரே ஒரு ஆசை. அது தான் செல்வியின் வயிற்றில் ஒரு குழந்தை பிறந்து பார்க்க வேண்டு மென்பது. ஆனால் உலகத்தில் ஆசைப்படுவதெல்லாம் நடந்து விடுமா? விதி யாரை விடும்? பிறப்பவன் இறப்பது நிச்சயம் தானே? இரு கிழ ஜீவன்களும் தங்கள் ஆசை நிறைவேறாமலேயே ஒன்றையொன்று பின்பற்றி இவ்வுலகை விட்டு இறைவன் திருவடி சேர்ந்தனர்.

காலச் சக்கரம் வேகமாகச் சுழன்றது. செல்வியும், நாகப்பனும் தாய், தந்தை இறந்த சோகத்தை லேசாக மறந்து, வானம்பாடிகள் போல் உல்லாசமா யிருந்து வந்தனர். இன்ப வாழ்வின் அறிகுறியாக, கிழ ஜீவன்களின் ஆத்மா கிம்மதி அடைவதற்காகச் செல்விக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்குக் கந்தன் என்று பெயரிட்டு மிக அருமையாக வளர்த்து வந்தனர்.

நாகப்பன், தன் அருமைச் செல்விக்காகத் தன் சிறு வீட்டைச் சுற்றி, மணமுள்ள மலர்ச் செடிகளை வைத்து அலங்கரித்திருந்தான். கம்மென்ற வாசனை புஷ்பங்களிலிருந்து காற்றில் கலந்து எப்போதும் வந்து கொண்டேயிருக்கும். அது ஒரு சிறிய குடிசை யானாலும் பார்ப்பதற்கு வெகு ரம்யமாயிருந்தது. இக் குடிலின் வாயிலில் குழந்தை கந்தன் தவழ்ந்து விளையாடுவதையும், தத்தி, தத்தி நடந்து சென்று செடிகளில் இருக்கும் புஷ்பங்களைப் பறிக்க முயல்வதையும் பார்த்துத் தம்பதிகள் ஆனந்தக் கடலில் மூழ்கியிருந்தனர், செல்வி இச்சமயத்தி லெல்லாம் கந்தனைப் படிக்க வைக்கவேண்டு மென்றும், பாம்பாட்டி தொழிலை அவனுக்குக் கற்பிக்கக் கூடாது என்றும் கணவனை மன்றாடிக் கேட்டுக் கொள்வாள். நாகப்பனும் அவள் மேல் வைத்திருந்த அன்பினால் அந்த விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டான்.

* * *

ஒரு நாள் மாலை. நாகப்பனுக்கு மனம் சரியாயில்லை, அவனுக்கு மகுடி வாசிக்க வேண்டும் போலிருந்தது. நாகப்பன் மகுடியில் தன்னையும் மறந்து புன்னாக வராளியை உள்ளமுருக வாசித்தான். இச் சங்கீத வெள்

ளத்திலே மூழ்கிய கந்தன் செல்வியின் மடியிலேயே உறங்கி விட்டான்.

செல்வி குழந்தையை வீட்டுக்குள் கிடத்தி விட்டு வெளியே வந்தாள். வெளியே வந்த அவளுக்கு மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. அவள் தலை சுழன்றது. நாகப்பன் தன்னையும் மறந்து மகுடி ஊதிக் கொண்டிருந்தான். அவனுக்கு எதிரில் ஒரு பெரும் கருநாகம் பளபள என்று விஷம் கக்கும் கண்களுடன் படமெடுத்து ஆடிக் கொண்டிருந்தது. அடுத்த நிமிஷம் புஸ், புஸ் என்று ஒரு சீறல். திடீரென ஒரு 'ஐயோ' என்ற அலறல் குரல் கேட்டது. நாகம் அவனைத் தீண்டி விட்டது. நாகப்பன் தரையில் சாய்ந்தான். செல்விக்குத் தலை சுற்றியது.

திடுக்கிட்டுக் கண் விழித்தாள். கணவரும் தன் குழந்தையும் தூங்கிக்கொண்டிருந்ததைப் பார்த்தாள். தான் இதுவரையில் கண்டது கனவு தான் என்பதை அறிந்ததும் குதூகலம் பொங்கியது. தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை அப்படியே தூக்கிக் கொண்டாள். தன் கணவனைத் தட்டி எழுப்பினாள். தான் கண்ட பயங்கரக் கனவை அவனுக்குச் சொன்னாள். "தாங்கள் இன்று முதல் மகுடி ஊதுவதையும், சர்ப்பம் பிடிப்பதையும் விட்டு விடுங்கள்" என்று வேண்டிக் கொண்டாள்.

நாகப்பன் மகுடியைத் தூக்கி எறிந்தான். தன் மனைவியையும் குழந்தையையும் அழைத்துக் கொண்டு பக்கத்தில் உள்ள நகரிலேயே போய்க் குடியேறி விட்டான்.

# படித்துப் பாருங்கள்!

## பாஞ்சாலி சபதம்

மகா கவி பாரதியார், தேனினும் இனித்திடும் தீந்தமிழில் பல அருமையான பாடல்கள் செய்திருக்கிறார். அவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தது போல் விளங்குவது அவர் யாத்த பாஞ்சாலியின் சபதம் என்ற காவிய நூலாகும். அதில் எத்தனையோ நயங்களும் சுவைகளும் நிரம்பிக் கிடக்கின்றன. அவற்றை வெகு விஸ்தாரமாகத் திரு பொ. திருகூடசுந்தரம் பிள்ளை விளக்கியுள்ளார். வியாச பாரதத்தினின்றும், வில்லி பாரதத்தி னின்றும் சிறிது மாறுபட்டு 'பாரதியார் பாடும் கட்டங்களை விளக்கி யிருக்கிறார்.

இக்கட்டுரையைத் தவிர 'பாரதியாரை நான் தரிசித்தது,' 'பாரதியார் எனக்குச் செய்த உதவி,' 'கம்பனைத் துய்க்கும் முறை' — என்ற பல தலைப்புக்களில் இன்னும் எட்டு கட்டுரைகள் அறிவுக்கு விருந்தாகவும் சிந்தனைக்குத் தூண்டுகோலாகவும் இந்நூலில் விளங்குகின்றன.

பிரசுரம்: காந்தி நிலையம், தியாகராய நகர், சென்னை—17. விலை 1—12—0.

## சிநேகிதி

மூன்று மனித உள்ளங்கள் தங்கள் பிரதிபலிப்பின் மூலம் ஒரு கதையையே சிருஷ்டித்து விடுகின்றன.

லலிதா ரசிக உள்ளம் படைத்தவள். சோமு கலை உள்ளம் படைத்தவன். ஸ்ரீமான் நாராயணசாமி அன்பு உள்ளம் படைத்தவர். அவர் பணக்காரர்; வயது அறுபதாகி விட்டது. இருபது வயதுப் பெண்ணான லலிதா சந்தர்ப்ப விசேஷங்களினால் அவருக்கு மனைவியானாள். இவர்கள் வாழ்க்கையில் எழுத்தாளன் சோமுவுக்கு எப்படியோ இடம் கிடைத்தது. அவர்கள் எப்படிப் பழகினார்கள்! ஆனந்தக் கண்ணீர் விட்டார்களா, சோகக் கண்ணீர் விட்டார்களா! இன்னும் யாரெல்லாம் வந்து இந்தக் கதையில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள் என்பவை யெல்லாம் மிகவும் சுவாரஸ்யமாகக் கூறப்பட்டிருக்கிறது இந்நூலில்.

இந்தக் கதையில் மனமாற்றம் இருக்கிறது; ஏமாற்றம் இருக்கிறது: சோகமும் சந்தோஷமும் இருக்கிறது: தோன்றியும் தோன்றாமலும் காதல் தலை காட்டுகிறது. இன்னும் என்ன வேண்டும்!

எழுதியவர்; அகிலன்; பிரசுரம்: பழனி பிரசுரம், மணிக்கூண்டு, புதுக்கோட்டை; விலை: 2—8—0.

## ஜி. வெங்கடாசலம்
### (சஷ்டியப்த பூர்த்தி வாழ்த்து மலர்)

கலையுலகில் ஜி. வெங்கடாசலம் அவர்கள் பெயர் மிகப் பிரசித்தம். கலை சம்பந்தமான எத்தனையோ புஸ்தகங்களை வெளியிட்டிருக்கிறார். கொழும்பிலிருந்து கொரியாவரை எங்கெல்லாம் பாரதக் கலை பரவி யிருக்கிறதோ அவற்றை நேர்முகமாகப் பார்த்து அனுபவித்து, உலகுக்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறார். அவரை நமது சென்னை சட்டசபையின் மேல் சபைக்கு அங்கத்தினராக நியமித்திருக்கிறார்கள். அன்னாருக்குச் சென்ற மே மாதம் 21-ம் தேதி அறுபதாவதாண்டு விழா கொண்டாடியபோது, பல கலைஞர்களும் அன்பர்களும் அனுப்பிய ஆங்கில வாழ்த்துக்களையும் பாராட்டுதல்களையும் தொகுத்துப் புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள்.

## குழந்தை உலகம்

காலஞ் சென்ற தமிழ்ப் பெரியார் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் ஏட்டிலிருந்த தமிழ் இலக்கியச் செல்வம் செல்லரித்துப் பாழாய்ப் போய் விடாமல், தேடிப் பிடித்துத் தொகுத்து அச்சு வாகனம் ஏற்றி அருந்தொண்டு புரிந்தார். அவருடைய பிரதம சிஷ்யரான கி. வா. ஜகந்நாதன் அவர்கள், தமிழ் நாட்டில் வரி வடிவம் பெறாமல், ஒலி வடிவத்தில், உலவி வரும் ஆயிரக் கணக்கான நாடோடிப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டுத் தமிழர்களுக்கு அரும் பணி செய்து வருகிறார்.

குழந்தை, பாட்டிலேயே வளர்கிறது என்றால் அது மிகையல்ல.

ஆராரோ ஆராரோ ஆராரோ
முத்தே பவழமே முக்கனியே சர்க்கரையே
கொத்து மருக்கொழுந்தே கோமளமே
கண்வளராய்

என்று தாயார் குழந்தைக்குத் தாலாட்டுப் பாடி வளர்க்கிறாள். பிறகு ஒவ்வொரு பருவத்திலும், தாயும், பாட்டியும், அண்டை வீட்டுப் பெண்ணும் விதம் விதமான விஷயங்களை வைத்து, வகை வகையான சந்தங்களில் பாடல்கள் அமைத்துக் கொஞ்சிக் குலாவுகிறார்கள். அவற்றை யெல்லாம் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள்.

பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18; விலை: ரூ. 2.

# சோதனையும் திருமணமும்

கிரிஜா



“லக்ஷ்மி மேச் பேக்டரி”யின் கடிகாரத்தில் மணி, ‘டாண்’ ‘டாண்’ என்று ஐந்து முறை அடித்து ஓய்ந்தது. அது வரை ஆடி வழிந்து கொண்டிருந்த சிப்பந்திகள் அனைவரும் எழுந்து வெளியேறத் தொடங்கினார்கள். கொஞ்ச நாள் முன் வரை சுறுசுறுப்புடன் ஓடிக் கொண்டிருந்த கம்பெனி இன்று மிகவும் மந்த கதியில் நடந்து கொண்டிருந்தது. பழைய வேலைகளும், புதிய வேலைகளும் பாக்கி நிற்கத் தொடங்கி விட்டன. இதற்குக் காரணம் என்னவாக இருக்குமென்று யோசித்து, யோசித்து மூளையைக் குழப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தார் கம்பெனி முதலாளி.

முதலாளியின் முன் வந்து நின்ற வேலையாள், “டேவிட் தங்களைக் காணக் காத்திருக்கிறார்” என்று அறிவித்தான். “வரச்சொல்” என்று உத்தரவளித்த முதலாளி நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். அரை நாழிகைக்குப் பிறகு அறைக்குள் நுழைந்த ஒரு அழகிய இளைஞன் அவருக்கு வந்தனமளித்துவிட்டு, “சார்! என் சகோதரியின் விவாக விஷயமாகச் சில ஏற்பாடுகள் செய்ய வேண்டும். அதற்காக எனக்கு ஒரு மாதம் லீவு தேவையாக இருக்கிறது” என்றான்.

திடுக்கிட்ட முதலாளி, “டேவிட், இந்தச் சமயம் நீயும் இல்லை என்றால் கம்பெனி எப்படி நடைபெறும்! ஏராளமான வேலைகள் பாக்கி நிற்கிறதே” என்றார். கவலை மிகுதியால் அவர் முகம் கறுத்துக் காணப்பட்டது.

எஜமானரின் முகத்தை ஏறிட்டு நோக்கிய டேவிட் அடக்கமாகச் சொன்னான்: “சார், என் ஒருவனால் மட்டும் முடியக்கூடிய வேலையாக இருந்திருந்தால் இத்தனை நாள் முடித்தே யிருப்பேன். பழைய வேலைகள் ஏராளமாகப் பாக்கி நிற்கிறது. இனியும் நீங்கள் பேசாமல் இருப்பது சரியல்ல. அந்த இரு காதன் நண்பர்கள்கூட முழுச் சோம்பேறிகளாகி விட்டார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். இனியாவது நீங்கள் கொஞ்சம் கவனித்து, வெளியிலிருந்து அதிகப் படியாகச் சில ஆட்களையும் எடுத்துக் கொண்டு, பழைய வேலைகளை முடித்துப் புதிய வேலைகளையும் கெடுபிடியாக நடத்தினால்தான் கம்பெனி ஒழுங்காக நடைபெறும்” என்று முடித்தான்.

கலக்கம் நீங்கிய முதலாளி அந்த இளைஞனின் புத்தி சாதுர்யத்தை மெச்சியதுடன், ஒரு மாத லீவையும் கொடுத்து அனுப்பி வைத்தார்.

நொடியில் முதலாளியின் மனக் குழப்பத்தைத் தெளிய வைத்துவிட்டு வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்த டேவிட் என்ற அவ்விளைஞனின் மனத்தில் இப்பொழுது பெரியதோர் குழப்பம் சூழ்ந்து கொண்டது. அவனது அருமைச் சகோதரி, அன்புத் தங்கை ‘ரோஸ்மேரி’யின் விவாக சம்பந்தமாக எழுந்த குழப்பம்தான் அது.

சின்ன வயதிலேயே தாய் தந்தையரை இழந்துவிட்ட டேவிட் தன்னை விட ஏழு வயது சிறியவளான தங்கை மேரியிடத்தில் தன் உயிரையே வைத்திருந்தான். அவன் அரவணைப்பில் ஒரு குறையுமின்றி வளர்ந்தாள் அவள். அவன் சகல விஷயங்களிலும் வசதிகள் செய்து, ஊக்கி உற்சாகமூட்டி, அவளைச் சகல கலைகளிலும் தேர்ந்தவளாகச் செய்திருந்தான்.

தாய், தகப்பன் விஷயத்தில் பாக்யம் செய்யாத அவர்கள் செல்வ விஷயத்தில் மிகுந்த பாக்யசாலிகளாகவே இருந்தனர். அக்காரணத்தால் தங்கள் இளமைப் பருவத்தைக் குதூகலமாகவே கழித்த அவர்கள் இன்று நல்ல யௌவனப் பருவத்தையும் அடைந்து விட்டனர்.

அற்புதமான அழகும், அதிசயிக்கக்கூடிய அறிவாற்றலும் கொண்ட தங்கை மேரியைக் குறித்து மிகப் பெருமை கொண்டிருந்தான் டேவிட். எல்லா விஷயங்களிலும் யாதொரு குறுக்கீடும், தடங்கலுமின்றி முன்னேறி இன்று ஒரு ஆதர்சப் பெண்ணாகத் திகழும் மேரி ஒரு நாள் புன்னகையுடன், “அண்ணா, ஒவ்வொரு ஆண் மகனும், பெண் சுதந்திரத்தைக் கௌரவித்தே வாழ்க்கை நடத்த வேண்டும். ‘அவள் ஏன் அவனோடு போனாள்! அவனோடு அவளுக்கு என்ன பேச்சு!’ என்றெல்லாம் சந்தேகியாமல் நம்பிக்கை வைக்க வேண்டும். அதுவும் என் வாழ்க்கையில் என்னிடம் பூர்ண நம்பிக்கை வைக்கும் ஒருவனுக்குத்தான் இடமுண்டு” என்று சொன்னாள்.

அழகு, அந்தஸ்து, அறிவு ஆகிய இந்த விஷயத்திலேயே மேரிக்குச் சமதையாக ஒரு வாலிபனைக் கண்டு பிடிப்பது கடினம். அப்படியிருக்க அபூர்வமாகக் கண்டு பிடிக்கப்படும் அவன் மேரியினுடைய இந்தப் பரீட்சையில் வெற்றி பெறுவதில்.........? இதுவே டேவிட்டின் குழப்பத்திற்குக் காரணம்.

ஆறு மாதங்களுக்கு முன் வேலை நிமித்தம் புதிதாக அவ்வூருக்கு வந்த ‘வில்லியம் ஜேம்ஸ்’ என்றவன் டேவிட்டுக்கு ஒரு விதத்தில் உறவினன் தான். ஆயினும் அதுவரை அவனைப் பார்த்திராத டேவிட் அன்று முதன் முதலாக அவனைப் பார்த்தவுடன், “கிடைத்து விட்டான்! என் மேரிக்கு ஏற்ற கணவன்!” என்றே குதூகலம் கொண்டான். அதன் காரணமாகவே அவனை வற்புறுத்தித் தன் வீட்டிலேயே இருக்கும்படியும் செய்தான். ஜேம்ஸும் ஒத்துக் கொண்டான்.

இன்று ஜேம்ஸ் வந்து ஆறு மாதங்கள் ஆகி விட்டன. இந்த ஆறு மாதத்தில் மேரியுடன் நெருங்கிப் பழகும் ஜேம்ஸ், 'அவளைத் தன் உயிருக்கும் மேலாக நேசிக்கிறான்' என்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கண்டு கொண்டான் டேவிட். ஆனால் அவன் தங்கை மேரி! ஜேம்ஸை அவள் வெறுக்கவில்லை; ஜேம்ஸின் எல்லாக் குணங்களும் கூட அவளுக்குப் பிடித்தே இருந்தது. ஆனால் அந்தப் பொல்லாத பெண்ணின் மனத்தைத்தான் முற்றிலும் அறிய முடியவில்லை.

குழப்பத்துடன் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்த டேவிட்டின் மனத்தில் இன்று ஒரு உறுதி ஏற்பட்டது. மேரிக்கு இணையான அழகும், ஆற்றலும் கொண்ட ஜேம்ஸைப் போன்ற ஒரு யுவனை அதிக காலம் காக்க வைப்பது தவறு. இதை இன்று மேரியிடத்தில் எடுத்துச் சொல்லி விட வேண்டும். பிறகு அவள் இஷ்டப்படி—ஆண்டவன் சித்தப்படி நடக்கட்டும்.

சிங்காரம் முடிந்து கையில் பந்தடிக்கும் மட்டையுடன் வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்த மேரி, அறையுள் நுழைந்த தன் சகோதரனின் வாட்டமான முகத்தைப் பார்த்து விட்டு நின்று விட்டாள். ஆயாசத்துடன் ஆசனத்தில் வந்து உட்கார்ந்த டேவிட்டின் அருகில் வந்து நின்ற மேரி, "உடம்பு சுகமில்லையா அண்ணா! ஏன் இவ்வளவு சோர்வாக இருக்கிறீர்கள்!" என்றாள் ஆதரவாக. இதுவே தக்க சமயம் என்று நினைத்த டேவிட் படபடப்புடன் பேச ஆரம்பித்தான்:—

"மேரி, நான் லீவுகூட எடுத்து வந்து விட்டேன். உன் சம்மதம் ஒன்றுதான் பாக்கி. ஜேம்ஸ் போன்ற ஒரு கௌரவமான வாலிபனை அதிகம் சோதிப்பதோ, காக்க வைப்பதோ தவறு. அத்துடன் அது அவனை அவமதிப்பதாகவும் முடியலாம். ஆகையால் நீ இன்னும் இரண்டு மூன்று வாரத்தில் உன் சம்மதத்தைச் சொல்லிவிட வேண்டும், நான் நாளைக் காலையே புறப்படுகிறேன். சித்தப்பாவிடம் சென்று உன் கல்யாணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்து முடித்துக் கொண்டு தான் திரும்புவேன். அதற்குள் உன் சம்மதமும் தெரிந்து விடுமானால் திருமணத்துக்கான அழைப்பிதழ்கூட அச்சடித்துக் கொண்டு வந்து விடுவேன்" என்று முடித்தான்,



அண்ணனின் படபடப்பைக் கண்டு புன்னகை புரிந்த மேரி, "பூ! இவ்வளவுதானே! இதற்காகவா இத்தனை வாட்டம்! நிச்சயம் இன்னும் இரண்டு வாரத்தில் என் சம்மதத்தையும் தெரிவித்து விடுகிறேன், அண்ணா. இருக்கட்டும் என் விவாகத்திற்கு ஏன் இவ்வளவு அவசரப் படுகிறீர்கள்!" என்று முடிவில் ஒரு கேள்வியைப் போட்ட மேரி அதற்கான பதிலை எதிர்பாராமலே, "இருங்கள் இதோ டிபன் எடுத்து வருகிறேன்" என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள்.

மேரி தன் அண்ணனுக்கு ஆறுதலாகப் பதில் கொடுத்து விட்டாளே தவிர அவள் உள்ளத்தில் பெரும் குழப்பம் ஏற்படத்தான் செய்தது. 'ஜேம்ஸ் மிக நல்ல குணமுள்ள வாலிபர்தான். ஆனாலும் வாழ்க்கை முழுவதும் சுதந்திரப் பட்சி போல் பறந்து திரிய விரும்பும் தன்மீது அவருக்கு இன்றுபோல் என்றுமே பூர்ண நம்பிக்கை இருக்குமா! இது விஷயத்தில் நிச்சயம் ஒரு சோதனை நடத்திப் பார்த்தே தீரவேண்டும். ஆனால்...... அதை எப்படி, எந்த முறையில் நடத்திப் பார்ப்பது!" இவ்விதக் குழப்பத்துடன் தன்னை மறந்து நின்று விட்டாள் மேரி. அதே சமயம், "ஜேம்ஸிற்கும் சேர்த்து 'டிபன்' எடுத்துக் கொண்டு வா மேரி" என்ற டேவிட்டின் குரல் அவள் சிந்தனையைக் கலைத்தது.

ஜேம்ஸ், மேரி, டேவிட் மூவரும் சிற்றுண்டி அருந்தியபடியே பலவிதமான பேச்சுக்களில் ஈடுபட்டுவிட்டனர். டேவிட் தன் கம்பெனியின் தற்போதைய நிலைமையையும், முதலாளி தன் ஆலோசனைப்படி வெளியிலிருந்து அதிகப் படியான ஆட்களை எடுத்துக் கொண்டு கம்பெனி வேலையை ஜரூராக நடத்தப் போவதைப் பற்றியும் சொல்லிக்கொண்டே வந்தவன் அவன் கம்பெனியில் வேலை பார்க்கும் இணை பிரியாத இரு நண்பர்களான, லோகநாதன், ரங்கநாதன் என்ற இருவரைப் பற்றியும் பிரமாதமாகப் புகழ ஆரம்பித்து விட்டான்.

"கேளுங்கள் ஜேம்ஸ், அவர்கள் உடல்தான் இரண்டு, உயிர் ஒன்றுதான். அவர்களைப் பிரிக்க வேண்டு மென்று நாங்கள் என்னவெல்லாமோ சூழ்ச்சிகள் செய்தோம். ஒன்றும் பலிக்கவில்லை. ஒரு சின்ன விஷயத்தில் கூட அவர்களுக்குள் மாறுதலான அபிப்பிராயம் ஏற்பட்டதில்லை. ஹோட்டல், சினிமா, பூங்கா எங்கே போனாலும் இருவரும்

ஒன்றாகத்தான் போவார்கள். எங்கும் அவர்களைத் தனித்தே காண முடியாது. லோகநாதன் வீட்டில் இருவரும் சேர்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருப்பார்கள். ரங்கநாதன் வீட்டில் ரங்கநாதனைக் காணாவிட்டால் நிச்சயம் லோகநாதன் வீட்டில் இருவரும் சேர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். ஊரே இவர்கள் சிநேகத்தைக் கண்டு ஆச்சரியப்படுகிறது. சிலருக்குப் பொறாமைகூட உண்டு. எங்கள் கம்பெனியில் அவர்களை, 'நாதன் நண்பர்கள்' என்று ஒன்றாகவேதான் குறிப்பிட்டுப் பேசுவோம்; அழைப்போம். லோகநாதன் சிரிக்கவில்லை என்றால் ரங்கநாதனும் சிரிக்க மாட்டார்......" என்று மேலும் தொடர்ந்து




எதை எதையோ சொல்லிக் கொண்டே போனான் டேவிட்.

அண்ணாவின் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டேயிருந்த மேரியின் மேதை இப்போது சுறுசுறுப்பாக வேலை செய்தது. "ஆம்; ஒரே கல்லால் இரு மாங்காய்களையும் வீழ்த்தி விட்டாள்......!" டீக் கோப்பையைக் காலி செய்த மேரி தனக்குத்தானே சிரித்துக் கொண்டாள். இதைக் கண்ட டேவிட் பேச்சை நிறுத்தி விட்டு, "ஏன் இப்படிச் சிரிக்கிறாய் மேரி!" என்று ஆவலோடு கேட்டான்.

"அண்ணா, ஒரு பெண் நினைத்தால் ஒரு நொடியில் அந்த நண்பர்களைப் பிரித்து கடும் விரோதிகளாகக்கூட ஆக்கி விடுவாள்! உங்களால் அது முடியாதுதான்" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினாள் மேரி.

கோபமடைந்த டேவிட், "ஆயிரம் ரூபாய் பந்தயம், வைக்கிறேன், அவர்கள் சிநேகத்தை ஒரு நாளும் உன்னால் முறிக்க முடியாது. இது நிச்சயம்" என்று உச்ச ஸ்தாயியில் கத்தி மேஜை மேல் ஓங்கிக் குத்தினான்.

கல கலவென்று சிரித்த மேரி, "அண்ணா! நீங்கள் நிச்சயம் ஆயிரம் ரூபாயை இழக்கத்தான் போகிறீர்கள்! இந்த மாத முடிவிற்குள் அவர்கள் சிநேகம் என்னவாகிறது என்று நீங்களே வந்து பாருங்கள்" என்று சொல்லிவிட்டு எழுந்தவள் மீண்டும், "அண்ணா, உங்கள் முதலாளி அதிகப்படியாக வெளியிலிருந்து ஆட்கள் எடுக்கப் போவதாகச் சொன்னீர்களே, பெண்களையும் வேலைக்கு எடுத்துக் கொள்வாரா!" என்றாள்.

இதைக் கேட்டதும் வியப்படைந்த டேவிட், "ஆகா, நிச்சயம் எடுப்பார்; நான் வேண்டுமானாலும் சிபார்சு செய்கிறேன்" என்றான்.

டீக் கோப்பையை மெதுவாகவே காலி செய்து கொண்டிருந்த ஜேம்ஸின் காதில் இந்தப் பந்தயமெல்லாம் விழுந்ததோ, இல்லையோ அது ஆண்டவனுக்கே வெளிச்சம்! ஏனெனில் அப்போது ஜேம்ஸின் மனம், "டேவிட், மேரியின் விவாக விஷயமாக ஏற்பாடு செய்யப் போகிறான்" என்

பறைக் கேட்ட பிறகு ஒரே ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தது. ஆகையால் அப்போது அவன்முன் பூகம்பமே நிகழ்ந்து, அதை அவன் கவனிக்காமல் இருந்தான் என்றால் கூட ஆச்சரியப்படுவதற்கு இல்லை.

அன்றும் அந்த லக்ஷ்மி மேச் பேக்டரியில் அல்வாரஸ்யமாகவே வேலை ஆரம்பமாயிற்று. சிப்பந்திகள் அனைவரும் நேரத்தைக் கடத்த வேண்டுமே என்று ஏதோ செய்து கொண்டிருந்தனர். ஆனால் அரைமணிக்குப் பிறகு அந்தக் கம்பெனியின் முதலாளியும், அவருடன் அழகின் 'ராணி'யான 'ரோஸ் மேரி'யும் கம்பெனிக்குள் நுழைந்தவுடன் சிப்பந்திகள் வியப்பினால் விரிந்த கண்களுடன் சுறு சுறுப்பாக எழுந்து நின்றனர்.

எல்லோரையும் பார்த்து முதலாளி, வெளியிலிருந்து எடுக்கப்படும் ஆட்களின் விவரத்தையும், இனிக் கம்பெனி சுறு சுறுப்பாக முன்னேற வேண்டிய அவசியத்தையும் விளக்கிச் சொல்லியதுடன் அந்த அழகிய பெண் மேரியையும் அனைவருக்கும் அறிமுகம் செய்து வைத்தார். அன்று முதல் மேரியும் அங்கு அவர்களுடன் வேலை செய்வாள் என்றும், அத்துடன் எல்லாருடைய வேலைகளையும் இனிமேல் அவள் மேற்பார்வை செய்வாள் என்றும் அறிவித்தார்.

திகைத்துப் போன சிப்பந்திகள் தங்கள் நெற்றியில் அரும்பி நின்ற வியர்வைத் துளிகளை மெள்ள வாருக்காகக் கைத் துணியால் துடைத்துக் கொண்டனர். அசந்துபோன அந்த காதல் நண்பர்களும் ஒரு பெருமூச்சுடன், அந்த அழகியின் முகத்தை விட்டு அகல மறுத்த தங்கள் விழிகளை அரை மனத்தோடு தாழ்த்திக் கொண்டனர்.

அழகும், கம்பீரமும் கொண்ட அவ்விரு வாலிபர்களையும் அனுமி அறிமுகம் செய்து கொள்ளும்



"ஐயா வீட்டில் இல்லாதபோது நான் மூன்று தடவை வந்து அவரைத் தேடினேன் என்று அவர் வந்தவுடன் சொல்லு."

"நிச்சயம் சொல்லுகிறேனுங்க, ஐயா இந்தச் சேதியைக் கேட்டால் ரொம்ப ரொம்ப சந்தோஷப்படுவாருங்க."

பொழுது மேரி அவளாகவே அவர்களுடன் மனமனவென்று பேசிக் கல கலவென்று சிரித்தாள். அச்சிரிப்பிலே சொக்கித் தன்னை மறந்து நின்ற அவ் வாலிபர்கள், அவள் சிரிப்பிற்கு மூன்னும் அனைத்தையும் உதறிவிடத் தயாராகி விட்டனர்.

சில நிமிஷங்களிலேயே மீண்டும் லக்ஷ்மி மேச் பேக்டரியில், லக்ஷ்மி கடாட்சமும், களையும் பொங்கித் ததும்ப ஆரம்பித்து விட்டது. குவிந்து குப்பையாகக் கிடந்த தஸ்தாவேஜுகளெல்லாம் அதனதன் ஸ்தானத்தில் ஒழுங்காக அடுக்கப்பட்டுக் கம்பெனியின் மற்ற வேலைகளும் அதிக சுறு சுறுப்புடன் நடக்கத் தொடங்கிவிட்டது.

கம்பெனி கடிகாரத்தில் மணி 'டண்' 'டண்' என்று பத்து அடிப்பதும், 'கண கண' வென்று மேரியின் சைக்கிள் மணி ஒலிப்பதும், அம் மணி ஒலி கேட்டதும் சிப்பந்திகளின் முகத்தில் புது ஒளியும், மலர்ச்சியும் ஏற்படுவதும், அதைத் தொடர்ந்து, 'டைப்ரைட்டர்களும்' 'பேனாக்களும்' சுறு சுறுப்பாக ஓடுவதும், தினசரி நிகழும் அழகான நிகழ்ச்சிகளாகி விட்டன. அத்துடன் மேலும் சில அபூர்வமான—நம்ப முடியாத நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன! மேரியின் வருகைக்குப் பிறகு காதல் நண்பர்கள்கூட ஒரு மாதிரியாக ஆகிக்கொண்டு வருவதைக் கண்டு சிப்பந்திகள் எல்லாரும் திகைத்தனர்.

நெற்றியில் சுருண்டு புரளும் கருங்கூந்தல் சுருள்கள் குலுங்க, கண்ணிமைகள் கலகலக்க, காதளவோடிய கயல் விழிகள் பளபளக்கக் கன்னம் குழிந்து சுருள் அலைகளை எழுப்ப, பவளம் போன்ற உதடுகள் விரிந்து நெளிய, முத்துப் போன்ற பற்கள் ஒளி வீசக் கல கலவென்று சிரிக்கும் மேரியின் உள்ளத்தை அள்ளும் சிரிப்பைக் கண்டு, முற்றும் துறந்த முனிபுங்கவரே சற்று நேரம் திகைத்து நின்று விடுவார் என்றால், அன்றாட இன்பங்களை அள்ளி அனைத்து அனுபவிக்கத் துடிக்கும் வாலிபர்களான காதல் நண்பர்கள் என்ன செய்வார்கள் பாவம். அவர்கள் அவ்வழகியின் சிரிப்புக்குமுன் சிநேகம், குடும்பம், கடமை இவைகள் யாவற்றையுமே மறக்கச் சித்தமாகி விட்டனர். அத்துடன், மேரி பந்தயத்தைக் கெலிக்க—தன் பரீட்சைக்கு விடை காண—விரித்த வலையில் நன்கு சிக்குண்டும் விட்டனர்.

அன்றும் மேரி தன் வழக்கம்போலப் பத்து மணிக்குக் கம்பெனிக்குள் நுழைந்து தன் மேஜை பண்டை வந்தவள் அப்போதுதான் பேனா எடுத்துவர மறந்து விட்டதை உணர்ந்தவள் போல் விரலைக் கடித்துக் கொண்டாள்.

மேரியின் அற்புதமான ஆடை அலங்காரத்தையும், அவ்வலங்காரத்தால் அதிகம் பிரகாசிக்கும் அவளது அழகையும் கண்டு வியந்து நின்ற லோகநாதன், அவள் தன் விரலைக் கடித்துக்கொண்டு சஞ்சலப் படுவதைக் காணச் சகியாமல் இடத்தை விட்டு எழுந்து அவளுக்கு உதவிசெய்ய நினைத்த போது, அதைத் துளியும் லட்சியம் செய்யாத மேரி அவனைத் தாண்டிக் கொண்டு மிகவும் சுவாதீனமாக ரங்கநாதன் மேஜையண்டை வந்து, "ஸார்! நீங்கள் டைப்தானே அடிக்கப் போகிறீர்கள்! எனக்குப் பேனா வேண்டும், நான் பேனா எடுத்துவர மறந்து விட்டேன். உங்கள் பேனாவை எடுத்துக் கொள்ளட்டுமா!" என்று கேட்டுக் கொண்டே மேஜையிலிருந்த பேனாவை எடுத்துக் கொண்டாள். பரபரப்புடன் நிமிர்ந்த ரங்கநாதன், "ஓ! எடுத்துக் கொள்ளுங்கள்; என் பாக்கச்

# கிருஷ்ணன் எப்படி வெற்றியடைந்தான்?




# நீங்கள் தேர்வது என்ன?

| நாவிதன் க்ஷவரமா? | ஸெவன் ஓ'க்ளாக் க்ஷவரமா? |
|---|---|
| பணம் விரயமாகிறது. | பணம் மிச்சம். |
| காடுமுரடான தோற்றம். | பலே ஜோரான தோற்றம். |
| வெட்டுக்காயங்கள். | சுகத்துக்கு சுகம். |
| தோல்வியின் சின்னங்கள். | வெற்றிக்கு மார்க்கம். |

முன் போக்கு கொள்கையுள்ள மனிதர்கள் தினமும் க்ஷவரம் செய்து கொள்ள உபயோகிப்பது ஸெவன் ஓ'க்ளாக் ஸ்லாட்டெட் பிளேடுகள்

## 7 o'clock




10 பிளேடுகள் கொண்ட பாக்கெட் விலை ரூ. 1/-



S S (I) TAM

மிகவும் ஜோராக எழுதும்" என்றான். அழகிய தோர் புன்னகையால் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்ட மேரி தன் இடத்துக்கு வந்து வெற்றியுடன் அமர்ந்தாள்.

சிவந்த தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்ட லோகநாதன் பல்லைக் கடித்துக் கொண்டு தன் வேலையைப் பார்க்கத் துவங்கினான். அவன் மனம் ஒரு நிலையில் இல்லாமல் படபடத்தது.

மாலை மணி ஐந்தடித்ததும் இடத்தை விட்டு எழுந்த மேரி நேராக ரங்கநாதன் இருக்கும் இடத்தை அடைந்து, "ஸார்! உங்கள் பார்க்கர் மிக அருமையாக எழுதியது; இதுபோல எனக்கொன்று வரவழைத்துத் தருவீர்களா!" என்று கேட்டாள் இனிமையாக.

புன்னகையுடன் எழுந்த ரங்கநாதன், "ஓ! இதையேதான் எடுத்துக் கொள்ளுங்களேன்" என்றான். அவன் குரலில் பெருமையும், உரிமையும் கலந்து ஒலித்தது. கலகலவென்று நகைத்த மேரி, "வேண்டாம்; வேண்டாம். அப்புறம் நீங்கள் பேனா இல்லாமல் சங்கடப் படும்போது, மனதிற்குள்ளாகவாவது என்னைத் திட்டுவீர்கள். எதற்கு இந்த வம்பு!" என்று சொல்லி மீண்டும் சிரித்தவள், மிகவும் இனிமையாக, "வேலை முடிந்து விட்டதல்லவா! வருகிறீர்களா வெளியே போவோம்!" என்றாள்.

குதூகலத்துடன் அவளுடன் கிளம்பிய ரங்கநாதன், லோகநாதன் பக்கம் திரும்பிப் பெருமை பொங்கப் பார்த்துவிட்டு மேரியுடன் வெளியே சென்று விட்டான்.

கூண்டில் அடைபட்ட சிங்கத்தைப் போலப் பொருமினான் லோகநாதன். நேற்று வரை நண்பர்களாக இருந்த அவர்களுக்குள் எவ்வித வித்தியாசமும் இல்லை. இவன் பார்க்கர் அவனிடம் கிடக்கும். அவனுடைய பர்ஸும், வாட்சும் இவனிடம் கிடக்கும். இதெல்லாம் அவர்களுக்குச் சகஜம். ஆனால் இன்றோ, அவ்விதம் இருந்தது முட்டாள்தனம்; முழு முட்டாள்தனம் என்று பட்டது லோகநாதனுக்கு. "அயோக்கியப் பயல்! என் பார்க்கரை வைத்துக் கொண்டு அவளிடம் ஆடுகிறானே ஒரு ஆட்டம்! இருக்கட்டும் சொல்லுகிறேன்" என்று பொருமிக் கொண்டே இடத்தை விட்டு வெறுப்புடன் எழுந்தான் லோகநாதன்.

வீட்டிற்குப் போனதும் முதல் காரியமாகத் தன் பையன் கிட்டுவைக் கூப்பிட்ட லோகநாதன், "அடே, அடுத்த தெரு ரங்கநாத மாமா வீட்டுக்கு ஓடு. அங்கே போய் அப்பா பார்க்கர் பேனாவை வாங்கிவரச் சொன்னதாகக் கேட்டு வாங்கி வா" என்று விரட்டினான்.

இரைக்க இரைக்க ஓடிவந்த கிட்டுவைக் கண்ட ரங்கநாதன் வியப்புடன், "என்னடா வேண்டும் உனக்கு!" என்றான். "அப்பா பார்க்கர் பேனாவை வாங்கிவரச் சொன்னார்" என்று கிட்டு சொன்னதும் ருத்திரமூர்த்தியாக மாறிய ரங்கநாதன், "போடா! கொடுக்க முடியாது என்று சொன்னதாக உங்கப்பாவிடம் போய்ச் சொல்லுபோ" என்று பையனை விரட்டிவிடவே திரு திருவென்று விழித்த கிட்டு வந்த வேகத்திலேயே திரும்பினான்.

மறுதினம் மயிலைப்போல் ஒயிலாக நடந்து வந்த மேரி ஒய்யாரமாக சிரித்து ஒரு புன்னகையை வீசிய வண்ணம் வந்து, மிகவும் சுவாதீனமாக லோகநாதன் மேஜையருகே வந்து நின்று, "ஸார்! என் கடிகாரம் சரியாக ஓடவில்லை. உங்கள் கடிகாரத்தில் மணி பார்த்துச் சொல்லுங்கள்" என்று மிக இனிமையாகத் தேன் குரலில் கேட்ட வண்ணம் தன் கைக் கடிகாரத்தைச் சரி செய்து கொள்ள ஆரம்பித்தாள்.



அம்மா:—ஏண்டா, வாயை மூடிக் கொண்டு சாப்பிட மாட்டாய்?

பையன்:-சரி, அம்மா! நீ சொல்லுகிறபடி நான் வாயை மூடிக் கொண்டு சாப்பிடுகிறேன். நீ கையைக் கட்டிக் கொண்டு சாதம் போடு, பார்க்கலாம்!

வியப்பும் பூரிப்பும் அடைந்த லோகநாதன் பரபரப்புடன் மணிபார்த்துச் சொன்னதுடன், "சாவி கொடுக்க மறந்து விட்டீர்களோ!" என்றான் புன்னகையுடன். இதை கேட்டுக் கலகலவென்று சிரித்த மேரி, "இல்லை; இல்லை; நேற்றுத் தவறிக் கீழே போட்டு விட்டேன். அதனால் கோபித்துக் கொண்டு கொஞ்சம் மக்கர் செய்கிறது" என்று சொல்லி மீண்டும் மிக இனிமையாகச் சிரித்தாள். பிறகு புன்முறுவலுடன், "வந்தனம்" என்று தன் நன்றியைத் தெரிவித்த வண்ணம் தன் இடத்திற்கு வந்து அமர்ந்தாள்.

வெற்றிப் புன்னகையுடன் லோகநாதன் ரங்கநாதனைப் பார்த்தபோது, ரங்கநாதன் தன் சிவந்த முகத்தை மறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

மாலை மணி ஐந்தடித்ததும், "உஸ் அப்பாடா!" என்று ஆயாசத்துடன் எழுந்த மேரி, லோகநாதனுக்கு மிகவும் அருகில் வந்து புன்னகையுடன், "காலையிலேயே உங்களைக் கேட்க நினைத்தேன்! இந்தப் புஷ்கோட்டுத் துணியை எங்கே வாங்கினீர்கள்! மிகவும் வழ வழப்பாகவும், அழகாகவும் இருக்கிறது. இந்தத் துணியில் ஜாக்கெட் தைத்துக் கொண்டால் மிகவும் அழகாக இருக்கும்" என்று சொன்னாள்.

கைவேலையைப் பரபரப்புடன் முடித்துவிட்டு எழுந்த லோகநாதன், "இது ஜாக்கெட்டிற்கு அதிக கனமாக இராதா!" என்று கேட்டான். புன்னகை புரிந்த மேரி, "சோளிப் பேட்டனுக்குக் கொஞ்சம் கனமாகத்தான் இருக்க வேண்டும்; அதுவும் இந்த சந்தனக் கலர் மிகவும் எடுப்பாக இருக்கும்" என்றாள் புன்முறுவலுடன்.

"இதை நேராகப் பம்பாயிலிருந்தே தருவித்தேன்! உங்களுக்கு வேண்டுமானால் என்னிடம் இருக்கிறது, தருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே மகிழ்ச்சியுடன் எழுந்த லோகநாதன், பழிவாங்கும் பார்வை யொன்றை ரங்கநாதன் மீது வீசிவிட்டுக் குதூகலமாகச் சிரித்துப் பேசியபடியே மேரியுடன் வெளியே புறப்பட்ட பொழுது அவன் உள்ளத்தில் ஆனந்த வெள்ளம் நிரம்பி வழிந்தது.

அதே சமயம் ரங்கநாதன் உள்ளத்திலே பொறாமை வெள்ளம் பொங்கிப் பொங்கிக் கொம்மாளமிட்டது. அந்தப் புஷ்கோட்டுத் துணியை



"டாக்டர், இந்த இஞ்செக்ஷன் கொஞ்சம் வலிக்கும். கொஞ்சம் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்துக் கொண்டிருங்கள்!"

"என்னாலே அது மட்டும் முடியாது, டாக்டர்!"

"ஏன் முடியாது? ஒரே ஒரு நிமிஷம் தான்!"

"அது சரி. எனக்கு வாயிலே ஒரு பல் கூடக் கிடையாதே!"

இருவரும் சேர்ந்துதான் தருவித்தார்கள். லோகநாதன் அதை உடனே தைத்துக் கொண்டு விட்டான். ரங்கநாதன் வேண்டும் போது தைத்துக் கொள்வோம் என்று இருந்ததுடன், அந்தத் துணியைக்கூட லோகநாதன் பெட்டியிலேயே போட்டும் வைத்திருந்தான். ஆனால் இன்றோ அப்படி வைத்து விட்டது மகா மடத்தனம் என்று பட்டது ரங்கநாதனுக்கு. "அந்தத் துணியைத் தானே இன்று அவனுக்குக் கொடுப்பதாகச் சொன்னான்! அயோக்கியப் பயல் இளித்து, இளித்துப் பேசி அவனை மயக்குகிறானே! நேற்று பார்க்கர் பேனாவைக் கொடுக்க மாட்டேன் என்றதற்குப் பழிவாங்க நினைக்கிறான்! அதையும் தான் இன்று பார்த்து விடுகிறேனே" என்று உள்ளுக்குள் பொருமியவாறே எழுந்தான் ரங்கநாதன்.

அன்று மாலை, தன் அறைக் கதவின் பக்கத்தில் அடிக்கடி பாவாடைத் தலைப்பொன்று தோன்றி மறைவதைக் கண்ட லோகநாதன், 'யாரது!' என்று சற்று அதட்டியே கேட்டான். அப்போது அங்கு வந்த கிட்டு, கதவிற்கு அப்பால் மறைந்து நின்ற ரங்கநாதன் பெண் ஹேமாவை, அப்பாவுக்கு முன்னால் இழுத்து வந்து நிறுத்தி "சொல்லேண்டி அப்பாவிடம்" என்றான். அப்போதும் ஹேமா தன் பாவாடைத் தலைப்பை முறுக்கிக் கொண்டு மௌனமாக நிற்கவே, "நான் சொல்லட்டுமாடி!" என்று கேட்ட கிட்டு "அப்பா, இவள் அப்பா புஷ்கோட்டுத் துணியை வாங்கி வரச் சொன்னாராம்" என்றான். இப்போது தைரியமடைந்த ஹேமா, "ஆமாம், எங்கப்பா அதைக் கையோடே வாங்கிண்டு வரச் சொன்னார்" என்றாள்.

வெகுண்டெழுந்த லோகநாதன் அக்குழந்தையை அடிப்பதுபோல் கையை ஓங்கி, "என்னை இளிச்சவாயன் என்று எண்ணி விட்டானா உங்கப்பா! போ! போ! கொடுக்க முடியாது என்று நான் சொன்னதாகச் சொல்லு போ" என்று தன் பலம் கொண்ட மட்டும் சத்தமிட்டுச் சொன்னான்.

கண்ணைக் கசக்கிய வண்ணம் வெளியே வந்த ஹேமாவைத் தொடர்ந்து வந்த கிட்டு, "இருட்டி விட்டதேடி! நானும் துணைக்கு வரட்டுமா!" என்றான். வெடுக்கென்று கண்ணை விட்டுக் கையை எடுத்த ஹேமா, "போடா, நீ ஒன்றும் எனக்குத் துணைக்கு வரவேண்டாம். இரு இரு! எங்கப்பாவிடம் சொல்லி உங்கப்பாவை நன்றாக அடிக்கச் சொல்லாவிட்டால் பாரு!" என்று தன் ஆள்காட்டி விரலை ஆட்டிப் பயமுறுத்தி விட்டு அங்கிருந்து ஓரே ஓட்டமாக ஓடிவிட்டாள்.

இவ்விதமாக நாதன் கன்பர்களிடையே குழப்பத்தையும், குரோதத்தையும், உண்டாக்கிக் கொண்டிருந்த மேரியின் செய்கை, கொஞ்சம் கொஞ்சமாக விரிவடைந்து கம்பெனி சிப்பந்திகளிடையே வம்புப் பேச்சாகி, அது வர வர வளர்ந்து, பல அணி அலங்காரங்கள் பெற்று, வீதி வழியே பவனி வந்து, ரங்கநாதன் லோகநாதன் இவர்கள் வீட்டை அடைந்த போது, அதி விபரீத உருவையும் அடைந்து விட்டது. அதாவது, "ரங்கநாதனும் லோகநாதனும் புதிதாக ஆபீஸில் வேலைக்கு வந்துள்ள ரோஸ்மேரி என்ற அழகியைக் காதலிப்பதுடன், ரிஜிஸ்டர் கலியாணம் செய்து கொள்ளும் அளவுக்கு வந்து போட்டி யிட்டு நிற்கிறார்கள்" என்ற விபரீதச் செய்தியாகப் பரிணமித்து விட்டது.

இந்த விபரீதச் செய்தியைக் கேட்டவுடனே கோழையான லோகநாதனின் மனைவி, 'கோ' வென்று கதறி அழ ஆரம்பித்து விட்டாள். தைரியசாலியான ரங்கநாதனின் மனைவி கூடத் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள். ஏற்கனவே கணவன்மார்களை யொட்டிச் சிநேகிதிகளாய் இருந்த அப் பெண்கள் இப்பொழுது உயிர் ஒன்றும் உடல் இரண்டும் ஆகி ஒருவர் மடியில் ஒருவர் முகத்தை வைத்துக் கொண்டு விம்மினார்கள். அதைத் தொடர்ந்து அவ்விரு இல்லங்களிலும், இடியும், மின்னலும், புகையும், பூகம்பமும் ஏக காலத்தில் எழுந்தது. பாத்திரங்கள் உருண்டன; உடைந்தன. பச்சிளம் குழந்தைகளின் முதுகு சிவக்கப் 'பளார்' 'பளார்' என்று அறைகள் விழுந்தன. இப்படியாக மிக அமைதியாக இருந்த அவ்விரு இல்லங்களிலும், பெரும் புயலே ஆரம்பமாகி விட்டது. இதனிடையே மாதம் ஒன்று கழிந்தது.

அன்று ஞாயிற்றுக் கிழமை. காலை இளம் வெயில் 'சுரீர்' என்று உடம்பில் படுவது கூடத் தெரியாமல் மாடி வராந்தாவில் உட்கார்ந்திருந்தாள் மேரி. அப்போது அவள் விரித்த வலையில் ஜோம்லையும் சிக்க வைத்து வலையைச் சுருக்கி இருக்க வேண்டிய கடைசி தினம். அதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்த மேரி. அன்று திரும்ப வேண்டிய அண்ணா டேவிட்டின் வருகைக்காகவே காத்திருந்தாள்.

அரை மணிக்குப் பிறகு கேட்ட ஆரவாரம், மேரியின் சிந்தனையைக் கலைக்கப் போதுமானதாகவே இருந்தது. அவள் மகிழ்ச்சியுடன் அண்ணா டேவிட்டை வரவேற்கச் சென்றாள்.

அன்று மாலை மணி மூன்றுக்கே வெளியே போகப் புறப்பட்டுக் கொண்டிருந்த டேவிட்டிடம் ஓடி வந்த மேரி, "அண்ணா, நீங்கள் உங்கள் வேலையெல்லாம் முடித்துக் கொண்டு சரியாக ஏழு மணிக்கெல்லாம் பூங்காவை யடுத்துள்ள மைதானத்திற்கு வந்து உங்கள் புகழ்பெற்ற நாதன் நண்பர்களைச் சந்தியுங்கள். அப்போது நீங்கள் அவர்களிடையே இதுவரை காணாத அதிசயத்தைக் காண்பீர்கள்" என்றாள். (அடுத்த இதழில் முடியும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119. Sladens Garden. Poonamallee High Road, Kilpauk, Madras

# நாளுக்கு நாள் அதிக தெளிவானதும்
# அழகானதுமான சருமம்



ரெக்ஸோனாவிலி
ருக்கும் 'கேடில்'
உங்கள் சருமத்திற்கு
புது ஆரோக்கியமும்
எழிலும் தரும்.




# ரெக்ஸோனா

'கேடில்'* கலந்த சோப்
இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

R.P. 85-50 TM

REGD. No. M. 1392
*Registered as a newspaper in Ceylon*

